தொகுதி 57 இதழ் 4

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

பிங்கள ஷூ சித்திரை மீ

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!

—சுவாமி விவேகானந்தர்






ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை 600-004

# காந்தியடிகளின் பொன்மொழிகள்




★ உண்மையைத்தான் நான் கடவுள் என்று தொழுகிறேன். இன்னும் நான் கடவுளைக் காணவில்லை. ஆனால் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இப்படித் தேடுவதில், நான் அருமை பெருமையாகப் பேணுகிற எதையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறேன். என் உயிரைக்கூடத் தியாகம் செய்யத் தயாராக இருப்பேன்.

★ நான் கடவுளை நேருக்கு நேராகக் காண விரும்புகிறேன். உண்மைதான் கடவுள் என்று எனக்குத் தெரியும். என்னைப்பொருத்தவரையில் கடவுளை அறியப் பயன்படும் ஒரே சாதனம் அஹிம்ஸை-அன்பு என்பதுதான்.

★ எப்படியோ ஒரு வழியில் கடவுள் நமக்கு உதவிபுரிய வருகிறார். நம்பிக்கையை இழந்துவிட வேண்டாம் என்றும், நாம் அழைக்கும் போதெல்லாம் தாம் வரத் தயாராகயிருப்பதாகவும், ஆனால் நமது நிபந்தனைகளின்படியின்றி, தமது நிபந்தனைகளின்படி வருவதாகவும் அவர் நமக்கு உணர்த்துகிறார். இது நான் கண்ட உண்மை. ஒரு தடவைகூட, கடைசி நேரத்தில் அவர் என்னைக் கைவிட்டது கிடையாது.

★ இந்தப் பரந்த உலகத்தில் யாதொரு உதவியும் ஆதரவும் இல்லாமல் திக்குத் திசை தெரியாது தவிக்கும் இருள் மண்டிய நேரத்திலும், கடவுளுடைய திருநாமத்தின்சக்தி நமக்குத் தெம்பு கொடுக்கிறது. நமது சந்தேகங்களையும், நிர்க்கதியான நிலையையும் தூரத் துரத்திவிடுகிறது.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

★ தமிழகத்தின் சமய வளர்ச்சிக்காக ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் சார்பாக தமிழில் வெளி வருகிறது.

★ மகான்களின் வாழ்க்கையில் நடைபெற்ற சுவையான நிகழ்ச்சிகள், நடைமுறை வாழ்க்கையில் மதத்தைக் கைக்கொள்ள வேண்டிய வழி முறைகள், சாஸ்திரங்களின் உட்பொருள் விளக்கங்கள், ஆத்ம தத்துவம் குறித்த ஆராய்ச்சி, வேதாந்தம், பக்தி, சமய சமரசம், உபநிஷத உண்மைகள், சைவம், வைணவம், ஞானக் கதைகள் ஆகிய கருத்து களைக் கொண்டது.

★ தற்கால நவீன மக்களின் மனப்போக்குக்கு ஏற்ற வகையில், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் காட்டிய வழியில் **சிறந்த மனிதர்களை உருவாக்குவது ஒன்றே இப்பத்திரிக்கையின் இலட்சியம்.**

★ சமயம், தத்துவம், பண்பாடு ஆகிய உண்மைகளைத் தெளிவாக எடுத்துக் காட்டுவதன் மூலம் சமய பூசல், சுயநலம், ஜாதி வேற்றுமை முதலான அழுக்குகளைக் களைந்து ஆக்கப்பூர்வமான வகையில் பணிபுரிந்து வருகிறது.

★ உலகின் பல பாகங்களிலும் தோன்றிய சீரிய சிந்தனைகள் ஒவ்வொரு இதழையும் அலங்கரிக்கின்றன.

★ குறிப்பாக இந்து மதத்தையும் பொதுவாக எல்லா மதங்களையும் தழுவிய கருத்துகள் ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தில் இடம்பெறுகின்றன.

★ இப்போதைய இன்றைய இளைஞர்களும் விரும்பிப் படிக்கும் வகையில் மத உண்மைகளை எடுத்து விளக்குவது, இப்பத்திரிகையின் குறிப்பிடத் தக்க சிறப்பான ஓர் அம்சமாகும்.

★ ஹிந்து சமயத்தை உள்ளபடியே புரிந்துகொள்ள விரும்புபவர்களுக்கும், பின்பற்ற விரும்புபவர்களுக்கும் மிகச் சிறந்த முறையில் துணை புரியும் தமிழ்ப் பத்திரிகை இதுவே.

★ இப்பத்திரிகையில் வெளிவரும் கட்டுரைகள் கருத்தாழம் கொண்டவை. ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த சன்னியாசிகளும் மற்றும் பல அறிஞர்களும் எழுதும் சிந்தனைக்கு விருந்தாக அமையும் கட்டுரைகளைக் கொண்டது.

★ ஆண்டுக்கு ஒருமுறை இப்பத்திரிகைச் சிறப்பு மலராக வெளிவருகிறது. சந்தாதாரர்களுக்கு அதற்கென அதிகவிலை இல்லை. ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் வெளியீடுகளை சந்தாதாரர்கள் 5 சதவிகிதம் கழிவு நீக்கி விற்பனைக்குப் பெறலாம்.

★ 1921ஆம் ஆண்டில் துவக்கப்பட்ட இப்பத்திரிகைக்கு 57ஆம் ஆண்டு நடந்து கொண்டிருக்கிறது.

★ உங்கள் உள்ளம் உயர நீங்கள் அவசியம் படிக்க வேண்டிய பத்திரிகை இது.

**சந்தா விவரம்:**

**வருட சந்தா: ரூ 7-00** **ஆயுள் சந்தா: ரூ 100**

**தனிப்பிரதி: 70 காசு**

சந்தாதாரராக விரும்புபவர்களும் பத்திரிகை விற்பனையாளர்களும் பின் வரும் முகவரிக்குத் தொடர்பு கொள்ளலாம். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.



**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

**மயிலாப்பூர் :: சென்னை 600004**

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்


| தொகுதி—57 | பிங்கள ஹூ சித்திரை மீ | இதழ் 4 |
|---|---|---|


## பொருளடக்கம்

பக்கம்





சென்னை மெரினு கடற்கரையிலுள்ள சுவாமி விவேகானந்தரின் சிலையும் விவேகானந்தர் இல்லமும் இந்த இதழின் விஜய முகப்பை அலங்கரிக்கின்றன.



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

| தொகுதி 57 | பிங்கள ஹூ சித்திரை மீ | இதழ் 4 |
| --- | --- | --- |

## பிரார்த்தனை

यो नः पिता जनिता यो विधाता
धामानि वेद भुवनानि विश्वा

— ऋग्वेदः

யோ ந: பிதா ஜனிதா யோ விதாதா
தாமானி வேத புவனானி விச்வா —ரிக்வேதம்

அவர் நமது தந்தையாகவும், தாயாகவும், தலைவராகவும் இருக்கிறார். இடங்கள் யாவையும் உலகங்கள் யாவையும் அவர் அறிகிறார்.

உளன் கண்டாய் நன்னெஞ்சே
உத்தமன் என்றும்
உளன் கண்டார் உள்குவார்
உள்ளத்து உளன் கண்டாய்
வெள்ளத்தின் உள்ளானும்
வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான் என்று ஓர் !

—முதலாழ்வார்





# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

ஒருவனுக்கு அகங்காரம் இருக்கும் வரையிலும் ஞானமும் முக்தியும் கைகூடாது. ஜனன மரணமும் நீங்காது.

யார் ஒருவனுக்குப் பணம் அடிமையாக இருக்கிறதோ, அவன்தான் உண்மையான மனிதன். பணத்தைச் சரியான வழியில் எப்படிப் பயன்படுத்துவது என்பதைத் தெரிந்து கொள்ளாதவர்கள், மனிதர்கள் என்ற பெயருக்குத் தகுதியானவர்களே அல்ல.

ஈசுவர கிருபையால், ''என் செயலாவது ஒன்றுமே இல்லை'' என்னும் உண்மை ஞானம் ஒருவனுக்கு உறுதிப்பட்டு நிலைத்துவிடுமானால், அவன் இந்தப் பிறவிலேயே ஜீவன் முக்தனாகி விடுவான். இந்த ஜன்மத்திலேயே ஆபத்துகள் எல்லாவற்றையும் கடந்தும் பந்தங்களிலிருந்து விடுபட்டும் முக்தி அடைந்துவிடுவான்.

மக்களில் ஒருசிலர் தங்களுடைய பணம், அதிகாரம், பெயர், புகழ், சமுதாயத்தில் தாங்கள் பெற்றுள்ள உயர்ந்த ஸ்தானம் ஆகியவைகளைப்பற்றி மிகவும் பெருமையடித்துக் கொள்கிறார்கள். ஆனால் இவைகள் எல்லாம் ஒருசில நாட்களுக்கு மட்டுமே நிலைத்திருக்கப் போகின்றன. அவர்கள் இறந்த பிறகு, இவைகளில் ஒன்றுகூட அவர்களைப் பின் தொடர்ந்து போகப் போவதில்லை.

ஒரு நாள் ஒரு சீடர் பரமஹம்சரிடம், காமத்தை எப்படி ஜெயிப்பது என்று கேட்டார். ஜபம் தியானம் ஆகியவைகளைச் செய்துவந்த போதிலும், தனது உள்ளத்தில் அடிக்கடி தீய நினைவுகள் எழுகின்றன என்று அந்தச் சீடர் தெரிவித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் அதற்குப் பின் வரும் பதிலைக் கூறினார்:—ஒரு மனிதன் ஒரு நாயை மிகவும் பிரியமாக வளர்த்து வந்தான். அவன் அதோடு கொஞ்சுவான்; விளையாடுவான்; அதைக் கைகளில் தூக்கிக்கொண்டு போவான்; அதை முத்தமிடுவான். அவனுடைய முட்டாள்தனத்தைக் கவனித்த ஒரு புத்திசாலி, நாய்க்கு அப்படியெல்லாம் இடம் கொடுக்கக்கூடாது என்றும், அது பகுத்தறிவில்லாத பிராணியாதலால் என்றைக்காவது ஒருநாள் அவனைக் கடித்துவிடும் என்றும் சொல்லிவிட்டுப் போனான். நாயின் எஜமானன் இதைக்கேட்டு அதன்படி நடக்க முடிவு செய்தான். இனிமேல் அதோடு ஒருபோதும் கொஞ்சிக் குலாவுவதில்லை என்ற தீர்மானத்துடன், தனது மடிமேலிருந்த அந்த நாயை தூர எறிந்தான். ஆனால் தனது எஜமானனுடைய மனமாற்றத்தை நாய் அறியவில்லை. ஆதலால் அது வழக்கம்போல அடிக்கடி அவனிடம் ஓடிவந்து குலாவத் தலைப்பட்டது. ஒவ்வொரு முறையும் நாய் அவனிடம் வந்தபோது, எஜமானன் அதை அடித்து விரட்டினான். எஜமானன் தன்னை வெறுக்கிறான் என்ற விஷயம் நாய்க்கு ஆரம்பத்தில் புரியவில்லை. நன்றாகப் பலதடவை அடிபட்ட பிறகுதான் அது தனது எஜமானனைத் தொந்தரவு செய்வதை விட்டது. உனது நிலையும் இதைப் போலவே இருக்கிறது. உனது உள்ளத்தில் நீ இதுவரையிலும் வைத்துப் போற்றி வந்துள்ள நாயை நீ விலக்க நினைத்தாலும் அது உன்னை விட்டு எளிதில் நீங்காது. இருந்தாலும் பாதகமில்லை. இனிமுதற்கொண்டு அந்த நாயோடு கொஞ்சிக் குலாவாமல் இரு. அது உன்னிடம் குலாவ வரும்போதெல்லாம் அதை நன்றாக அடி. இவ்விதம் நீ செய்து வந்தால், நாளடைவில் அதனுடைய தொந்தரவுகளிலிருந்து உனக்கு முற்றிலும் விடுதலை கிடைத்துவிடும்.



ஓம்




# விஜயதீபம்

## சத்திய வாக்கு

எனக்கு அரசியலில் நம்பிக்கை கிடையாது. கடவுளும் சத்தியமுமே இந்த உலகில் உண்மை அரசியல் ஆகும். மற்றவையெல்லாம் வெறுங்குப்பை.

இந்தியாவில் முன்னேற்றம் எதுவும் ஏற்பட வேண்டுமானால், முதலில் சமய எழுச்சி உண்டாக வேண்டும். ஆகவே சமுதாய, அரசியல் கருத்துக்களைப் பரப்புவதற்கு முன்னால் நாட்டைப் பாரமார்த்திக வெள்ளத்தில் மூழ்குவியுங்கள்.

நாம் கவனம் செலுத்தவேண்டிய முதலாவது வேலை இதுவாகும். நமது உபநிஷதங்களிலும் சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் உள்ள அதி ஆச்சரியமான உண்மைகளை அந்த நூல்களிலிருந்து வெளியே கொண்டு வந்து நாடெங்கும் விரிவாகப் பரப்ப வேண்டும்.

Vivekananda

(சுவாமி விவேகானந்தர்)

## எது வேண்டும்?

(உபநிஷதச் சிந்தனைகள்)

ஆழ்ந்த ஆன்மிக உண்மைகளை எடுத்துச் சொல்வதில் உபநிஷதங்களுக்கு இணையாக, உபநிஷதங்களைத்தான் சொல்லவேண்டும். அவைகள் சொல்லும் கருத்துக்கள் உண்மையா, பொய்யா என்று கனவில்கூட யாருமே சந்தேகப்பட வேண்டிய அவசியம் இல்லை. உபநிஷதப் பிரமாணங்கள் மறுக்க இயலாதவைகள். பல மகான்களைப் பலநூறு ஆண்டுகளாக உருவாக்கி இருப்பவைகள். வேதகாலம்முதல் இன்றைய விவேகானந்தர் காலம் வரையிலும் பல மகான்களுடைய அனுபவ உண்மைகளாக இருந்து கொண்டிருப்பவைகள். காலத்தால் கரைந்து போகாத உண்மைகளை சுருதித்தாய் (உபநிஷதமாகிய அன்னை) பேசுகிறாள். மனித குலத்தை மகோன்னதமாகிய அமரநிலையை அடையும்படி ஊக்குவிக்கிறாள்.

உபநிஷத வாழ்க்கை வாழ்ந்த விவேகானந்தரின் விரிந்த இதயத்தில், கடோபநிஷதம் சிறப்பாக ஒரு தனி இடத்தைப் பெற்றிருந்தது. மரண தேவனின் வாய்மொழியாக மகத்தான பல அரிய உண்மைகளை அள்ளி அள்ளித் தரும் கடோபநிஷத்தில் பின்வரும் ஒரு கருத்தும் இடம் பெறுகிறது.

ச்ரேயச்ச ப்ரேயச்ச மனுஷ்யம் ஏத:தௌ
ஸம்பரீத்ய விவிநக்தி தீர: |
ச்ரேயோ ஹி தீரோ அபிப்ரேயஸோ வ்ருணீதே,
ப்ரேயோ மந்தோ யோக க்ஷேமாத் வ்ருணீதே ||

—கடோபநிஷத் 2—2

பொருள்:- 'சிரேயஸ் பிரேயஸ் ஆகிய இரண்டும் மனிதனை நாடிவருகின்றன. தீரன் அவைகளை நன்கு பரிசீலனை செய்து, இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை உணர்கிறான். தீரன் பிரேயஸ்ஸைவிட்டு சிரேயஸ்ஸை வரிக்கிறான்.

மந்த புத்தியுள்ளவன் பொருளை ஈட்டுவதிலும் காப்பாற்றுவதிலும் நோக்கம்கொண்டு பிரேயஸ்ஸை வரிக்கிறான்.'

உயர்ந்த நன்மையைத் தருவதாகவும் மோட்சத்தை அடையச் செய்யும் சாதனமாகவும் இருப்பது சிரேயஸ். உண்மையான ஒரே நன்மையாகிய ஆத்ம சாட்சாத்காரத்தை சிரேயஸ்ஸைப் பின்பற்றுவதால் மட்டுமே பெற முடியும். கடவுள் சாட்சாத்காரம் ஒன்றே ஒன்றுதான் வாழ்க்கையின் குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடைவதற்கு ஒரே ஒரு பாதை தான் உண்டு. அதை சிரேயஸ் மார்க்கம், அதாவது மிகச் சிறந்தவழி என்று உபநிஷதம் தெரிவிக்கிறது.

பிரேயஸ் என்பது இனிமையைத் தரக்கூடியது. ஆனால் இனிமையைத் தரக்கூடிய பிரேயஸ் உண்மையான நன்மைக்கு நம்மை அழைத்துச் செல்வதில்லை. மாறாக, இது நம்மை மேலும் மேலும் பந்தப்படுத்துகிறது. முடிவற்ற பிறப்பு இறப்பு என்னும் சம்சாரத்தில் ஆழ்த்துகிறது.

பிரேயஸ் இவ்வுலகிலும் மறு உலகிலும் மகிழ்ச்சியைத் தருகிறது. வேதத்தைச் சேர்ந்த கர்மகாண்டப் பகுதிகளில் பல யாகங்களைப் பற்றியும் சடங்குகளைப் பற்றியும் கூறப்பட்டுள்ளன. இத்தகைய வைதீக கர்மங்களைச் செய்வதன் மூலமாக சொர்க்கம் போன்ற சூட்சுமமான இன்பங்களைத் தரக்கூடிய உலகங்களை ஒருவன் அடைகிறான். இவ்விதம் இவ்வுலகில் ஸ்தூலமாகப் பெறும் இன்பங்களும், மறு உலகில் சூட்சுமமாக அனுபவிக்கப்படும் இன்பங்களும் பிரேயஸ் என்னும் பிரிவில் அடங்குகின்றன.

இந்த உலகில் பெறும் இன்பங்கள் நிலையானவைகள் அல்ல. அதைப் போலவே மறு உலகில் பெறும் இன்பங்களும் நிலையானவைகள் அல்ல. ஏனெனில் தனது புண்ணியச் செயல்களின் பலனாக ஒருவன் அடையும் சொர்க்கம் முதலான இன்பங்கள் அனைத்துமே, இந்த உலக வாழ்க்கையோடு ஒப்பிடும்போது சற்று நீண்ட காலம் அனுபவிக்கக் கூடியவைகளாக மட்டுமே விளங்குகின்றன. ஆனால் புண்ணியப் பலன் தீர்ந்தபிறகு அந்த உலகங்களை அடைந்தவர்களும் கீழ்நிலைக்கு வந்தாக வேண்டும்.

அறிஞனாகிய விவேகி ஒருவன், இவ்வுலக இன்பங்களையும் மறுஉலக இன்பங்களையும் ஒரே விதமான மனப்பான்மையுடன் ஒதுக்கிப் புறக்கணிக்கிறான். இரும்பு விலங்காக இருந்தாலும், பொன் விலங்காக இருந்தாலும், இரண்டுமே தன்னைப் பந்தப்படுத்தி அடிமை நிலையில் வைப்பதை அவன் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை.

ஆகவே, அவன் நிலையானதும் உண்மையான நன்மையைத் தரக்கூடியதுமாகிய சிரேயஸ்ஸை நாடுகிறான்.

முதலில் சொல்லப்பட்ட பிரேயஸ் வைதீக கர்மங்களைக் கொண்டது. சிரேயஸ் ஞான மார்க்கத்தைச் சேர்ந்தது. இந்த ஞான மார்க்கம்தான் பிரம்மவித்தை, பிரம்மஞானம், பிரம்மத்தைச் சேர்தல் எனப்படுகிறது. இவைகளின்மூலம் குறிப்பாகச் சுட்டிக்காட்டப்படும் சொல்லுக்கு அடங்காத உயர்ந்த ஒருநிலை, விவேகத்தாலும் வைராக்கியத்தாலும் துறவு மனப்பான்மையாலும் மட்டுமே அடையக்கூடியதாக இருக்கிறது. ''கர்மத்தால் அல்ல, குழந்தைகளைப் பெறுவதால் அல்ல, செல்வத்தால் அல்ல; துறவினால் (தியாகத்தால்) மட்டுமே அந்த அமரநிலை அடையப் பெறுகிறது'' என்பது வேதவாக்கு. அதுவே முக்காலும் உண்மை என்பதில் சந்தேகமில்லை.

பிரேயஸ், சிரேயஸ் ஆகியவைகள் முறையே இருளும் ஒளியும் போன்றவை. ஒன்று சிற்றின்பத்தைத் தருகிறது. மற்றொன்று பேரின்பமாகிய கடவுள்நிலையையே ஒருவனை அடையச் செய்கிறது.

சிரேயஸ், பிரேயஸ் ஆகிய இரண்டுமே மனிதனுடைய கவனத்தைக் கவரும் வகையில் அவன் முன்னால் வந்து நிற்கின்றன. இரண்டில் எதை வேண்டுமானாலும் ஏற்றுக்கொள்ளவும், நிராகரித்துவிடவும் மனிதனுக்குப் பரிபூரண சுதந்திரம் இருக்கிறது. நெருப்பைக்கொண்டு ஆக்க வேலைகளுக்கும், அழிவு வேலைகளுக்கும் மனிதன் பயன்படுத்துவதைப் போலவும், வீசிக்கொண்டிருக்கும் காற்றைப் பாய்மரத்தை விரித்துப் பயன்படுத்தவோ, பயன்படுத்தாமல் போகவோ மாலுமிக்குச் சுதந்திரம் இருப்பதைப் போலவும்—சிரேயஸ், பிரேயஸ் ஆகியவைகளில் ஏதேனும் ஒன்றை ஏற்கவோ தவிர்க்கவோ சுதந்திரம் கொண்டவனாக மனிதன் இருக்கிறான்.

வாழ்க்கையில் பல பிரச்சனைகளை நாம் சந்திக்கிறோம். ஒரு பிரச்சனை போனால் மற்றொரு புதிய பிரச்சனை என்று ஓயாமல் பிரச்சனைகள் தொடர்ந்துகொண்டிருக்கின்றன.

அப்படிப் பிரச்சனைகள் எழும்போது, 'இதை இப்படிச் செய்யலாமா? அல்லது அப்படிச் செய்யலாமா?' என்று நாம் சிந்திக்கிறோம். சிந்தித்து ஓர் உறுதியான முடிவை எடுத்து அதை நடைமுறைப் படுத்தவும் செய்கிறோம்.

இதைப் போலவே விவேகம் படைத்தவனாக உள்ள சாதகன், தனது ஆன்மிக முன்னேற்றத்திற்கு ஊறுவிளைவிக்கக்கூடியவைகளாக உள்ளவைகளின் தொகுப்பாகிய பிரேயஸ்ஸையும் பார்க்கிறான். ஆன்மிக முன்னேற்றத்திற்குத் துணைபுரியக் கூடியவைகளின் தொகுப்பாகிய சிரேயஸ்ஸையும் பார்க்கிறான். இரண்டில் சிரேயஸ்ஸை வரிக்கும் அவன், இறுதியில் அழியாததும் இறைவனுடன் என்றென்றுமாக ஒன்றுபட்ட நிலையுமாகிய வாழ்க்கையின் இலட்சியத்தையே அடைகிறான். அறிஞனாகிய அந்த தீரன் பரம புருஷார்த்தத்தை அடைவதால் சாதுவாகிறான், நன்மையை அடைகிறான், மங்களத்தை அடைகிறான், சிவத்தை அடைகிறான். பிரேயஸ்ஸை வரிக்கும் மற்றவனோ வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோளிலிருந்து வழுவி விடுகிறான்.

பிரேயஸ், கவர்ச்சி நிறைந்த இனிய ஒரு சோலையைப்போல ஆரம்பத்தில் தோன்றினாலும், முடிவில் திக்குத் தெரியாத காட்டில் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. சிரேயஸ் கவர்ச்சி உடையதல்ல. கத்தி மேல் நடப்பதைப் போன்றது அது. ஆனால் வியவகார நிலைகளை எல்லாம் கடந்த பாரமார்த்திக நிலைக்கு அது ஒருவனை எடுத்துச் செல்கிறது.

பிரேயஸ்ஸினுடைய பலன் குறுகிய காலத்திலேயே தெரிந்துவிடுகிறது. சிரேயஸின் பலன் அறிந்து கொள்வதற்குச் சற்றுத் தாமதமானாலும், அறிஞர்களால் நாடக்கூடியதாக இருக்கிறது.

பொதுவாக மனித மனம் உயர்ந்த விஷயங்களைப் பற்றத் தவறி விடுகிறது. அடங்காத ஒரு முரட்டுக் குதிரையோடு மனம் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. விழிப்பாக உள்ளவர்களால் மட்டுமே ஆன்மிக வாழ்க்கையை உண்மையாகவே வாழவும் முடியும். அதில் வெற்றி பெறவும் முடியும்.

பிறர் அனுபவங்களைக் கண்டும், கேட்டும், சாஸ்திர குரு வாக்கியங்களுக்கு இணங்கியும் நாம் சிரேயஸ்ஸைப் பின்பற்ற முயல வேண்டும். சிரேயஸ்ஸை நாடுபவர்களைத் தேனை மட்டுமே நாடும் தேனீயைப் போன்றவர்கள் என்றும், பிரேயஸ்ஸை நாடுபவர்களை எதை வேண்டுமானாலும் நாடிச் செல்லும் ஈயைப் போன்றவர்கள் என்றும் சொல்வது தவறாகாது. பிரேயஸ்ஸைப் பின்பற்றும் அளவுக்கு ஒருவன் கீழ்நோக்கி விழுகிறான். சிரேயஸ்ஸைப் பின்பற்றும் அளவுக்கு ஒருவன் உயர்ந்து உயர்ந்து மேல்நோக்கிச் செல்கிறான்.

ஊர் உலகத்தவர்களால் 'பெரிய மனிதன்' என்று பாராட்டப்படுபவர்களில் பலரும் பிரேயஸ்ஸை நாடும் அறிவிலிகளே ஆவர். எனவே தான் அவர்களை ஸ்ரீராமகிருஷ்ணர் கழுகுகளுக்கு ஒப்பிட்டுக் கூறுகிறார்.

தவம், பிரம்மசரியம், தன்னடக்கம், யமம், நியமம், ஆத்ம சாதனம், சாதன சாதுஷ்டயம் போன்ற வரிசையில் கீதை சொல்லும் தெய்விக இயல்புகள் அனைத்தும் சிரேயஸைச் சேர்ந்தவை. அவைகளைப் பின்பற்றவே ஒருவன் தனது வாழ்க்கையைப் பணயமாக வைக்க வேண்டும். அமரத்துவமே மனிதனின் நிஜ சொரூபம். சிரேயஸ் நிஜசொரூபத்தை மறைக்கும் திரையை விலக்குகிறது. பிரேயஸ் மேலும் மேலும் திரைகளைக் கூட்டிக்கொண்டே செல்கிறது.

சிரேயஸ், பிரேயஸ் ஆகியவைகள் தனித்தனியாக வருவதும் உண்டு. சில சமயங்களில் இரண்டும் சேர்ந்து வருவதும் உண்டு.

அவிவேகிக்குத் தனித்தனியாக அவை வரும் போதும் சிரேயஸ்ஸை ஏற்கும் திறமை இருப்பதில்லை. இரண்டும் சேர்ந்து வந்தாலோ, சிரேயஸ்ஸைப் பிரித்தறிவதே மிகமிகக் கடினமான ஒரு பிரம்மப்பிரயத்தனமாக இருக்கும். அத்தகைய அவன் சிரேயஸ்ஸைத் தன்னுடைய தாக்கிக் கொள்ள இயலாதவனாகவே இருக்கிறான்.

தீரன் என்னும் சொல் உபநிஷதங்களில் குறிப்பிடத்தக்க முக்கியமான ஒரு சொல். பல உபநிஷதங்களில் இச்சொல் சிறப்பாக இடம் பெற்றுள்ளது. உடல் வலிமை கொண்டவன் என்ற பொருளில் இல்லாமல், விவேகி என்னும் பொருளில் உபநிஷதங்கள் இந்தச் சொல்லைக் கையாளுகின்றன.

உபநிஷதங்கள் குறிப்பிடும் திரன் உள்ளத்தால் உயர்ந்தவன். தெளிந்த அறிவுடையவன். நித்தியத்தையும் அநித்தியத்தையும் பிரித்தறிந்து நித்தியத்தை மட்டுமே ஏற்கக் கூடியவன்.

அவன் பொய்ப்பொருள்களை விலக்கி மெய்ப்பொருளை நாடுகிறான். கவர்ச்சியை உடையதும் பந்தப்படுத்துவதுமாகிய அற்ப இலௌகிக இன்பங்களை, அதாவது பிரேயஸ்ஸை அவன் அறவே புறக்கணித்துவிட்டு, எல்லாக் கட்டுகளிலிருந்தும் விடுதலை பெற்ற நிலையாகிய ஆத்ம ஞானத்தைப் பெறுவதற்காக மட்டுமே வாழவும் முயற்சிக்கவும் செய்கிறான். எத்தகைய ஒரு பாக்கியசாலி அவன்! மகானின் நிலையை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் அவனை நினைக்கும்போதே கையெடுத்துக் கும்பிடத் தோன்றுகிறதே!

**தீரன் அவைகளை நன்கு பரிசீலனை செய்து இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை உணர்கிறான்:-** தண்ணீரும் பாலும் கலந்திருந்தால், அன்னம் பாலை மட்டும் பிரித்து ஏற்கிறது. சர்க்கரையும் மணலும் சேர்ந்திருந்தாலும் எறும்பு மணலை விலக்கிச் சர்க்கரையை மட்டும் ஏற்கிறது. செயற்கை மலர்களையும் இயற்கை மலர்களையும் குவியல் குவியலாகக் குவித்து வைத்தாலும், தேனீ இயற்கை மலர்களை நாடிச் சென்றே தேனை எடுக்கும்.

அதைப் போலவே, தீரனாகிய விவேகி சிரேயஸ், பிரேயஸ் ஆகிய இரண்டையும் ஆதியோடந்தமாகத் துருவித் துருவி ஆராய்கிறான். மேல், கீழ், அடி என்று அலசி அலசி நன்கு ஆராய்கிறான். தாற்காலிகமானதும் பொய்மையுமாகிய பிரேயஸ்ஸை விலக்கி நிலையானதும் மெய்மையுமாகிய சிரேயஸ்ஸை, தண்ணீரை விலக்கிப் பாலை மட்டுமே ஏற்கும் அன்னம் போல ஏற்கிறான்.

கடோபநிஷத்தில் தீரன் என்னும் சொல் வேறு ஓர் இடத்திலும் இடம் பெறுகிறது. ''பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வம்பூஸ்-தஸ்மாத் பராங் பச்யதி நாந்தராத்மன் | கச்சித் தீர: ப்ரத்யகாத்மான - மைக்ஷ - தாவ்ருத்த - சக்ஷு - ரம்ருதத்வ - மிச்சன் || பரமேஸ்வரன் இந்திரியங்களை வெளிநோக்கு உடையவைகளாகச் சிருஷ்டித்துள்ளார். ஆதலால் மனிதன் வெளித்தோற்றங்களையே பார்க்கிறான். எவனோ ஒரு தீரன் சாகா நிலையை விரும்பி, அடக்கி உள்முகமாகத் திருப்பப்பட்ட பார்வையை யுடையவனாகப் (பரமாத்மாவின் பிரதிபிம்பமாகிய) பிரத்தியகாத்மாவைப் பார்க்கிறான்.''

இங்கும் கடோபநிஷதம், ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தடையான இலௌகிகங்கள் (உலகப்பற்றுகள்) அனைத்தையும் தவிர்த்தும் அடக்கியும் இருப்பவன் எவனோ, அவனையே 'தீரன்' என்று சொல்கிறது. ஏனெனில் எல்லா விதத்திலும் செயற்கரிய செயல் என்று கூறத் தக்கது, கடவுள்நிலையை அடைவதேயாகும். அதை நடைமுறைப் படுத்துபவனே உண்மையில் தீரன் என்னும் சொல்லுக்குத் தகுதியானவன். 'ஐம்புலன்தன்னை வென்றான்தன் வீரமே வீரமாம்' என்பது அவ்வையின் வாக்கு.

பிரேயஸ் முதலில் இன்பம்போலத் தோன்றுகிறது. ஆனால் இறுதியில் எல்லையில்லாத துன்பத்தில் சேர்ப்பிக்கிறது. சிரேயஸ்ஸின் விளைவு நேரெதிரிடையானது. முதலில் துன்பம்போலத் தோன்றி முடிவில் நிலையானதாகிய நித்தியப் பேரின்பத்தில் கொண்டு சேர்க்கிறது. ஒன்று அடியிலிருந்து சாப்பிடும் கரும்பு; மற்றொன்று நுனியிலிருந்து சாப்பிடும் கரும்பு என்று சொல்லலாம்.

சிரங்கு வந்துள்ள ஒருவனுக்குச் சொரியச் சொரிய இன்பமாக இருக்கிறது. ஆனால் பிறகு அதுவே இன்னமும் அதிகமான துன்பத்தைத் தந்துவிடுகிறது. ஒட்டகங்களுக்கு முட் செடிகளைத் தின்பதில் விருப்பம் அதிகம். ஆனால் முட்செடிகளைத் தின்னத் தின்ன அவைகளின் வாயிலிருந்து இரத்தம் வடிந்து பிறகு பெரும் துன்பத்தைவிளைவிக்கிறது—பிரேயஸ்ஸைவரிப்பவனுடைய உண்மைநிலையும் இதுவேயாகும்.

பிரேயஸ்ஸை நாடுபவன் உலகப் பொருள்களை நாடுவதன் காரணமாக எவ்வளவோ துன்பப்படுகிறான். எவ்வளவோ அவமானப் படுகிறான். என்றாலும் அதிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள மாட்டான். மேலும் மேலும் அவன் உபாதிகளைப் பெருக்கிக் கொள்கிறான். அதன் காரணமாகப் பந்தங்களாகிய சங்கிலிகளால் தன்னைத்தானே பிணைத்துக் கொள்கிறான்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் 'பூதம் காத்த பணம்' என்று ஒரு கதை சொல்வது வழக்கம். அந்தக் கதையில் சொல்லப்பட்ட ஏழாவது

ஜாடியில், எவ்வளவு தங்கம் போட்டாலும் நிரம்பவில்லையாம். அதைப்போன்றதுதான் பிரேயஸ். பல நூறு ஓட்டைகளை உடைய ஒரு பெரிய குடம் போன்றது அது. எவ்வளவுதான் இலௌகிகத்தைப் போட்டு நிரப்பினாலும் அது நிரம்பப் போவதில்லை.

ஐம்புலன்களும் இயல்பாகவே உலகப் பொருள்களை நாடுபவைகளாக அமைந்துள்ளன. ஆனால் அவைகளைப் பெறுவதால் புலன்கள் திருப்தி அடைந்து ஓய்வதில்லை. இதை ஸ்ரீமத் பாகவதம் தெரிவிக்கும் யயாதி கதையால் அறியலாம்.

புலன்களைத் திருப்திப் படுத்தப்படுத்த அவைகளுக்குள்ள பலம் மேலும் மேலும் அதிகமாகிறது. இவ்விதம் பிரேயஸ்ஸைப் பின்பற்றும் முட்டாள்தனத்தினால், நாமே நமது புலன்களை அடக்க இயலாத வகையில் அசுரபலம் கொண்டவைகளாக வளர்த்து விடுகிறோம். நெருப்பை அணைக்க நினைத்து நெய்யைச் சொரிவதால், நெருப்பு மேலும் மேலும் கொழுந்து விட்டு எரியுமேயன்றி அணைந்து போகாதல்லவா?

மக்கள் எவ்வளவுக்கு எவ்வளவு அவித்தை நிறைந்தவர்களாக இருக்கிறார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு பிரேயஸ்ஸில் ஈடுபாடு கொண்டவர்களாக இருப்பார்கள். அவர்கள் இந்த வாழ்க்கையை போக பூமியாகக் கருதுவதால், தங்களை அறியாமலேயே தங்களுக்கு அழிவைத் தேடிக்கொள்கிறார்கள். பகுத்தறிவு உடையவன் மனிதன். ஆனால் அவன் பொதுவாக தனக்கு உண்மையான நலனைத் தருவதைத் தேடுவதில்லை.

சிரேயஸ்ஸை நாடுபவனுக்கு இந்த உலகம் ஒரு கர்மபூமி. அவன், உலகத்தையும் தான் பெற்ற மனிதப் பிறவியையும் தலை சிறந்த முறையில் பயன்படுத்தி ஆத்ம சக்தியை வளர்த்துக் கொள்கிறான்.

அளவில்லாத நன்மையைத் தரும் சிரேயஸ்ஸைப் புறக்கணித்து, அளவில்லாத துன்பம் தரும் பிரேயஸ்ஸை மக்கள் பின்பற்றுவதற்குக் காரணம் அறியாமையே ஆகும். கனி இருக்கக் காயை உண்பது போல இது. விவேகம் கொண்டவன் காயைப் போன்ற பிரேயஸ்ஸை விலக்கி கனியாகிய சிரேயஸ்ஸை வரிக்கிறான்.

மகாபாரதப் போர் நடப்பதற்கு முன்பு, கண்ணனிடம் துரியோதனன் முதலில் சென்றான். பிறகு அர்ஜுனன் சென்றான். இருவரும் நடக்க இருக்கும் போருக்குக் கண்ணனின் துணையைப் பெறுவதற்காகச் சென்றார்கள். கண்ணன், தாம் ஒரு பக்கமும் தமது சேனைகள் ஒரு பக்கமும் போரில் ஈடுபடுவதாகச் சொன்னார். இதைக் கேட்ட துரியோதனன், கண்ணனின் சேனைகளையே மேலானதாக எண்ணி ஆவலோடு கேட்டுப் பெற்றுக்கொண்டான். அர்ஜுனன், கண்ணனின் சேனைகள் பாண்டவருக்குத் துணையாக அமையாததைக் குறித்து ஒரு சிறிதும் கவலைப்படவில்லை. பழம் நழுவிப் பாலில் விழுந்ததைப்போல, தான் உள்ளூர விரும்பியபடி கண்ணனே தனக்குத் துணையாகக் கிடைத்ததை நினைத்து மனம் பூரித்தான். துரியோதனனைப்போல விவேகம் இல்லாதவர்கள், பிரேயஸ் தங்களுக்கு நன்மையைத் தரும் என்று நம்பி ஏமாற்றம் அடைகிறார்கள். பரபரப்பு இன்றி அமைதியாக இருந்து, விவேகத்தைக் கொண்டு அறிஞன் சிரேயஸ்ஸைத் தேர்ந்தெடுப்பதைப்போல அர்ஜுனனின் செய்கை அமைந்தது.

ஒருமுறை காளிதேவி, ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அஷ்டசித்திகள் எனப்படும் சித்திகளைத் தர முற்பட்டாள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் விரும்பியிருந்தால் தாராளமாக அவைகளைப் பெற்றுக் கொண்டிருக்கலாம். ஆனால் அவரோ, ஞான வாழ்க்கைக்குத் தடையாக அமையும் என்பதால், அருவருப்புடன் அவற்றைப் புறக்கணித்து விட்டார்.

பிற்காலத்தில் ஒருமுறை, நரேந்திரரைச் சோதிப்பதற்காகச் சித்திகளைத் தருவதாக ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்னார். நரேந்திரர் சில வினாடிகள் யோசித்துவிட்டு, ''இந்த சித்திகளைக் கொண்டு கடவுள் சாட்சாத்காரத்தைப் பெற முடியுமா?'' என்று கேட்டார். குருதேவர், ''இல்லை, சித்திகளைக் கொண்டு கடவுள் சாட்சாத்காரத்தைப் பெற முடியாது. ஆனால், கடவுளுக்காக நீ காரியம் செய்யும்போது அவை உதவும்'' என்று தெரிவித்தார். நரேந்திரர் உடனே ஒரு சிறிதும் தயக்கமில்லாமல், ''நான் முதலில் கடவுளை உணரப் பாடுபடுகிறேன். அவரை உணருகிறேன். கடவுளை நான் சாட்சாத்கரித்த பிறகு, சித்திகளை நான் பெறுவதா, வேண்டாமா என்பதைப் பார்த்துக் கொள்ள

லாம்'' என்று திட்டவட்டமாகத் தெரிவித்து விட்டார்.

விஸ்வநாத தத்தரின் மறைவிற்குப் பிறகு, நரேந்திரரின் குடும்பத்தில் வறுமை பயங்கர மாகக் கோரதாண்டவமாடியது. வறுமை நீங் குவதற்காகத் தமது சார்பில் காளிதேவியிடம் பிரார்த்திக்கும்படி நரேந்திரர், ஸ்ரீராமகிருஷ் ணரை வேண்டினர். பரமஹம்சர், நரேந்திரரை காளிதேவியின் சன்னதியில் சென்று பிரார்த்திக்கும்படி அனுப்பி வைத்தார். தேவி யின் சன்னதியில் உயிருள்ள தேவியையே நரேந் திரர் கண்டார். அந்த நிலையில் அவர் தமது இலௌகிகத் தேவைகளை தேவியிடம் வேண்டிப் பிரார்த்திக்காமல், ''தாயே, எனக்கு ஞானத் தையும் பக்தியையும் கொடு. உன்னை இடை யருமல் தரிசிக்கும் நிலையை எனக்கு அருள் வாய்!'' என்று பிரார்த்தித்துக் கொண்டார். இவ்விதம் மூன்று முறை தேவியிடம் சென்றும், இலௌகிகத் தேவைகள் எதையுமே நரேந்திரர் பிரார்த்திக்கவில்லை. தமது பிற்கால வாழ்க்கை யின்போது விவேகானந்தர் அதைப்பற்றிக் கூறி யிருப்பதில் ஒரு பகுதி வருமாறு:—''மூன்ருவது முறை புறப்பட்டேன். சன்னிதியில் பிரவேசிக் கும்போது அதிதமான ஓர் அவமான உணர்ச்சி என்னைப் பற்றிக்கொண்டது. அம்பிகையிடம் எப்படிப்பட்ட ஓர் அற்பமான விஷயத்தைப் பிரார்த்திக்க வந்திருக்கிறேன்! கருணைவாய்ந்த ஒரு மாமன்னரிடம் வாழைக்காயும் வெண் டைக்காயும் கேட்பதைப்போல அல்லவா என் னுடைய செயல் இருக்கிறது! நான் எப்படிப் பட்ட ஒரு முட்டாள்!' என்று எண்ணினேன். வெட்கத்துடனும் வேதனையுடனும் மிகவும் பணிவாகக் காளிதேவியைக் கும்பிட்டேன். 'அம்மா, ஞானத்தையும் பக்தியையும் தவிர எனக்கு வேறு எதுவுமே வேண்டாம்' என்று பிரார்த்தித்தேன்.''

மேலே குறிப்பிட்ட நிகழ்ச்சி, விவேகானந்த ரின் வரலாற்றில் விரிவாகவும் உள்ளத்தைத் தொடும்வகையிலும் அமைந்துள்ளது. இதைப் போன்று சிரேயஸ்ஸைப்பற்றிய உண்மையை உள்ளத்தில் பதியும் வகையில் விளக்கும் பல நிகழ்ச்சிகள், ஸ்ரீராமகிருஷ்ணருடைய வாழ்க் கையிலும் அவருடைய சிடர்களுடைய வாழ்க் கையிலும் இடம் பெற்றுள்ளன.

ஓரளவிற்கு நீதி, ஒழுக்கம், தர்மம் ஆகி யவைகள் பிரேயஸ்ஸில் இடம் பெற்றிருக்கின் றன. ஆனல் அதோடு நின்று விடாமல் சாதகன் மேலும் மேலும் உயர்ந்து செல்ல வேண்டும் என்பதற்காகவே சிரேயஸ் மார்க்கத்தை உப நிஷதம் பாராட்டிப் பேசுகிறது. சிரேயஸ்ஸைப் பின்பற்றுபவனுக்கு வேறு உதாரணம் கூடத் தேட வேண்டியதில்லை. கடோபநிஷதமே அதற்கு நசிகேதனைத் தலைசிறந்த உதாரணமாக எடுத்து காட்டியிருக்கிறது.

'சிரேயஸ் பிரேயஸ் ஆகிய இரண்டும் மனிதனை நாடி வருகின்றன. தீரன் அவைகளை நன்கு பரிசிலனை செய்து, இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை உணர்கிருன். தீரன் பிரேயஸ் ஸைவிட்டு சிரேயஸ்ஸை வரிக்கிருன். மந்தபுத்தி யுள்ளவன் பொருளை ஈட்டுவதிலும் காப்பாற்று வதிலும் நோக்கம்கொண்டு பிரேஸ்ஸை வரிக் கிருன்' என்று யமதர்மனின் வாய்மொழியாக அமைந்துள்ள இந்த மந்திரம், வேறுபட்ட இரண்டு நிலைகளை எடுத்துக்காட்டி, 'உலகம் இப்படித்தான் இருக்கிறது. இதை நீ உணர்ந்து எப்போதும் விவேகத்துடன் வாழ்ந்து நித்திய நிலையாகிய ஆத்ம ஞானத்தை பெறுவாயாக' என்று குறிப்பாக உணர்த்துகிறது.

உபநிஷதம் இந்த மந்திரத்தின் மூலம், சாத கர்கள் ஒவ்வொருவரும் தீரர்களாகவே இருக்க வேண்டும் என்றும், மந்த புத்தி கொண்டவர் களாக இருந்து அரிய மனிதப் பிறவியை வீணுக்கலாகாது என்றும் எச்சரிக்கை தரு கிறது.



எல்லாத் துன்பங்களுக்கும் மருந்து ஆண்டவன்தான்.

—ஆப்பிரிக்கப் பழமொழி.

கடவுளை அண்டி வாழ்வாயாக. நித்தியமான உண்மைகளுக்கு முன்னல், மற்றப்பொருள் கள் யாவும் உனக்கு அற்பமானவைகளாகத் தோன்றும்.

—மசியன்.

# சிறுத்தமதி

கி. வா. ஜகந்நாதன்

மனித மனம் சும்மா இராது. அது அலைந்து திரிந்து கொண்டே இருக்கும். சும்மா இருக்கும் போது பகற் கனவு காணும். தான் கண்ட காட்சிகளையும், பெற்ற அனுபவங்களையும் மீட்டும் சிந்தித்துப் பார்க்கும். நிறைவேறாத ஆசைகளைக் கற்பனையால் நிறைவேற்றிக்கொள்ளும். அதன் விளைவாக, உறங்கும்போது பலவகையான கனவுகள் உண்டாகும்.

இறைவனிடம் ஈடுபட்டவர்களுக்கு எப்போதும் அவனுடைய சிந்தனையே உள்ளத்தில் இருக்கும். மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்களும் இறைவனைச் சுற்றியே படரும். அவர்களுடைய சிந்தனைகளும் கற்பனைகளும் இறைவனைச் சுற்றிச் சூழவே விரிந்து நிற்கும்.

உலகியற் புலவர்களுக்கு, கற்பனை உலகியற் பொருள்களிலே படரும். இறைவனுடைய பக்தியில் ஆழ்ந்த புலவர்கள் தம்முடைய கற்பனைக்குப்பொருளாக இறைவனையும் அவனோடு சம்பந்தப்பட்டவற்றையும் வைத்துப் பாடுவார்கள்.

அவர்கள் சிந்தனை அவன் திருவருளில் ஆழும்; இறைவனைப் பற்றிய தத்துவங்களை ஆராயும். அவர்கள் கற்பனை அவனுடைய திருமேனி அழகிலே ஈடுபடும். அவன் அங்கங்களுக்கும் தோற்றத்துக்குமுரிய உவமைகளை நாடி விரிக்கும்; உருவகமாக்கும். அவனுடைய திருவிளையாடல்களையும் பராக்கிரமங்களையும் விரிவுபடுத்தும்; கதையாக்கும்; காவியமாக்கும்; அலங்காரங்களையெல்லாம் பெய்து அழகு படுத்தும்.

செல்வம் மிக்க தாய், தன் குழந்தைக்கு எப்படியெல்லாம் ஆடை, அணி, மலர்களைப் புனைந்து அழகு செய்து பார்க்கலாமோ, அப்படியெல்லாம் பார்ப்பாள்; புதிய புதிய அணிகலன்களைப் பண்ணிப் பூட்டுவாள். இறைவனுடைய பக்தியில் ஈடுபட்ட அருட்புலவர்கள் இறைவனை எப்படியெல்லாம் பாடலாம் என்று யோசித்து யோசித்துப் பாடுவார்கள். கற்பனையைத் தூண்டிவிட்டுச் சொல்லோவியம் படைப்பார்கள். ஆழ்வார்களும் நாயன்மார்களும் திருவாய் மலர்ந்தருளிய அருட் பாடல்களைப் பார்த்தால் இந்த உண்மை புலனாகும்.

அவர்கள் சிலசமயம் இறைவனை நோக்கிப் புலம்புவார்கள்; சிலசமயம் அவனுக்கு ஆளான தன்மையை நினைந்து பெருமிதம் அடைவார்கள்; சில சமயம் அவனுடைய திருமேனி அழகிலே சொக்கிப் போய்ப் பாடுவார்கள்; அவன் குணங்களிலே கரைந்து நிற்பார்கள்; அவன் கருணையைக் கூறி உருகுவார்கள்; அவன் பராக்கிரமத்தைச் சொல்லி வியப்பார்கள்; அவனை அடைந்து உய்யுங்கள் என்று உபதேசிப்பார்கள்; அவனையே நோக்கி, இப்படிச் செய்யவேண்டும் என்று விண்ணப்பித்துக்கொள்வார்கள். இவ்வாறு பலவகையில் பாடும்போது ஒன்பது சுவைகளும் அந்தப் பாடல்களில் தனித்தனியே ததும்பி நிற்கும்.

காரைக்காலம்மையாரும் இந்த இனத்தைச் சேர்ந்தவரே. அவர் பாடிய பாடல்களில், பல வேறு நிலைகளில் அவர் இருந்து பாடுவதை நாம் பார்த்து வருகிறோம். அவருடைய கற்பனை உணர்ச்சி செயற்படும் பாடல் ஒன்றை இப்போது பார்க்கப்போகிறோம். இறைவனுடைய அங்கத்துக்கும் அணிகலன்களுக்கும் உவமைகளைச் சொல்லி மகிழ்கிறார் அம்மையார்.

இறைவனுடைய திருமேனி செக்கர் வானத்தைப் போலச் சிவந்திருப்பது. அவனுடைய திருமார்பை அம்மையார் பார்க்கிறார். அது அந்திச் செவ்வானம் போலக் காட்சி அளிக்கிறது. அவன் பாம்பையே அணிகலனாக அணிந்திருக்கிறான். அதுவே அவனுக்கு மாலையாக இருக்கிறது. எல்லோரும் மாணிக்க மாலையைப் புனைவார்கள். அவனோ மாணிக்கத்தைத் தரும் பாம்பையே தாராகப் புனைந்திருக்கிறான். மார்பிலே அணியும் மாலைக்குத் தார் என்று பெயர். அவனுடைய மார்பில் தார்போல அமைந்து பாம்பு விளங்குகிறது.

—பூண்டதோர்
தார் ஏறு பாம்புடையான் மார்பில்

[தார் ஏறு பாம்பு – மாலையின் தன்மையை உடைய பாம்பு.]

அந்த மார்பில் பளிச்சென்று ஒரு கொம்பு தோன்றுகிறது. அது பன்றியின் கொம்பு.

பன்றி கருமையாக இருந்தாலும் அதன் கொம்பு வெள்ளைவெளேரென்றிருக்கும். இறைவனுடைய திருமார்பில் அந்த வெண்மை விட்டு விளங்குகிறது; தழைத்து இலங்குகிறது. கூரிய முனையையுடைய கொம்பு அது.

**மார்பில் தழைத்து இயங்கு**
**கூர்ஏறு கார்ஏனக் கொம்பு**
*[ஏனம் — பன்றி.]*

திருமால் வராகவதாரம் எடுத்துக் கடலுள் ஆழ்ந்திருந்த பூமியை மேலெடுத்து நலம் செய்தார். அப்பால் அந்த மிடுக்கினால் செருக்குற்று உலகைக் கலக்கியபோது அந்த ஏனத்தின் ஆற்றலை அடக்கி அதன் கொம்பைச் சிவபெருமான் தன் திருமார்பில் அணிந்து கொண்டார் என்பது புராண வரலாறு.

இப்போது காரைக்காலம்மையார் திருமார்பைப் பார்த்து அதில் தார்போல விளங்கும் பாம்பையும் அங்கே உள்ள பன்றிக்கொம்பையும் பார்க்கிறார். அவருடைய கற்பனை உணர்ச்சி இயங்கத் தொடங்குகிறது.

இறைவனுடைய திருமார்புக்கு அந்திச் செவ்வானத்தை உவமை கூறலாம் என்று எண்ணினார். அந்த வானத்தில் மதியைப் போல இருக்கிறது என்று ஏனக் கொம்பைச் சொல்லலாமா? இந்தக் கொம்பும் வளைந்திருக்கிறது; வெண்மையாக இருக்கிறது. ஆனால் அருகே பாம்பு இருக்கிறதே! அதை எப்படி இந்தக் கற்பனைப் படத்தில் பொருத்துவது? பாம்புக்கும் சந்திரனுக்கும் என்ன உறவு? உறவாவது! பகை அல்லவா இரண்டினிடையும் இருக்கும்?

இப்போது அம்மையாருக்குப் பளிச்சென்று ஒரு கருத்துத் தோன்றிவிட்டது. வானத்தில் எழுந்தசந்திரனைப் பாம்புவிழுங்குகிறது; தீண்டி மெல்ல மெல்ல விழுங்குகிறது. முழுச்சந்திரனாக இருந்த வடிவம் வரவரக் குறைந்து சிறு பிறையாக ஆகிவிட்டது. விழுங்கின பாம்பு அருகில் இருக்க, முக்கால் பங்கு விழுங்கப்பட்ட சந்திரன் வடிவு குறைந்து சிறுத்துத் தோன்றுகிறது. இப்படிச் சொல்லலாம் அல்லவா?

**ஈண்டு ஒளிசேர் வானத்து**
**எழுமதியை வாளரவம்**
**தீண்டச் சிறுகியதே போலாதே?**

நிறைந்த ஒளிசேர்ந்த வானத்தில் எழுந்த முழுச்சந்திரனைப் பாம்பு தீண்டி விழுங்கியதனால் அது சிறுத்துப்போனதுபோல இந்தக் காட்சி இருக்கவில்லையா?' என்று கேட்கிறார் அம்மையார்.

அவருடைய கற்பனையில் மூன்று பொருள்களில் இரண்டுக்கு உவமை சொன்னார். இறைவன் மார்புக்குச் செவ்வானத்தையும் ஏனக் கொம்புக்கு மதியையும் சொன்னார்; பாம்பை அப்படியே வைத்துக்கொண்டார்; அதை ராகு வென்று கற்பனை பண்ணிக்கொண்டார்; அவ்வளவுதான்.

**ஈண்டுஒளிசேர் வானத்து**
**எழும்மதியை வாள்அரவம்**
**தீண்டச் சிறு கியதே**
**போலாதே?—பூண்டதோர்**
**தாரேறு பாம்புடையான்**
**மார்பில் தழைத்திலங்கு**
**கூர்ஏறு கார்ஏனக் கொம்பு**

[அணிந்த ஒப்பற்ற மாலையின் தன்மையையுடைய பாம்பையுடைய சிவபிரானுடைய திருமார்பில் நன்றாகச் சிறந்து விளங்கும் கூர்மையையுடைய, கருமையான பன்றியின் வெண்மையான கொம்பு, நெருங்கிய ஒளி சேர்ந்த, வானத்தில் எழுந்த சந்திரனை ஒளியையுடைய பாம்பு தீண்டி விழுங்க அது சிறுத்தது போல இருக்கிறதல்லவா?

ஒளிசேர் என்பது மதிக்கு அடை. வாளி — கொலையுமாம். போலாதே — போலாதோ; வினா. தழைத்து இலங்கு — விட்டு விளங்கும். கார் — கருமை. கொம்பு போலாதே?]

இது அற்புதத் திருவந்தாதியில் 38-ஆவது பாட்டு.



மலர்களில் மணம் இருப்பதைப்போலவே ஆண்டவனும் உன்னிடமே இருக்கிறான். இதை அறியாமல், தன்னிடம் இருக்கும் கஸ்தூரியை உணராத மான், புல்லில் தேடுவதுபோல் நீ ஏன் வெளியில் தேடுகிறாய்?

—கபீர்தாசர்.

# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

**ஜூன் 16**

(ம—எழுதிய ஸ்ரீராமகிருஷ்ணரின் உரைத் தொகுப்பான) 'ஸ்ரீராமகிருஷ்ண கதாம்ருதம்' படிக்கப்பட்டது. அதில் ஓரிடத்தில், 'கர்மத் தின்மூலம் இறைவனை உணர முடியும் என்பது உண்மையல்ல. ஆனால் தன்னலமற்ற கர்மத்தி லிருந்து அவனை உணரும் ஆர்வ வேட்கை மிகுகிறது. இந்த ஆர்வ வேட்கை அவனது கிருபையை இழுத்து வருகிறது. அதன்பின் மானுடன் இறைவனை அனுபவிக்கிறான்' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியதாகக் கண்டிருந்தது.



இதைக்குறித்து சுவாமி துரியானந்தர் சொன் னார்: 'மேலெழுந்தவாரியாக, சமய சாஸ்திரங் களைச் சிறிது படிப்பதும், சிறிது தியானம் செய் வதும் ஆண்டவனை அனுபவபூர்வமாக அறிவ தற்குப் போதாது. அவனைக் காண நீ தவிக்க வேண்டும். அவனுக்காகவே இதயம் துடித்து நைந்துருக வேண்டும். எங்களிடம் குருமகராஜ் 'எனக்கு அம்பிகையின்பால் இப்படிப்பட்ட தீவிர ஏக்கம் இருந்ததால்தான் அவள் எனக்கு சகல சௌகரியங்களையும் தந்தாள்— இந்தக் காளிகோயிலையும் மதுர் பாபுவையும்* தந் தாள், இறைவனுக்காக மனப்பூர்வமான தவிப்பு இருந்துவிட்டால் எல்லாமே சாதக மாக அமைந்துவிடும்' என்று சொல்வார்.

''பக்தியின்றி வேறு வழியில்லை.''

**சுவாமி சிவானந்தர்:** ''மிகவும் சரி. இறைவ னின் பாதபதுமங்களைத் தியானி. இந்திரியங்கள் தாமே உள்ளடங்கும். மனம் அவனிலேயே தன்னை இழந்துகொள்ளும். ஆன்மிகமான எல்லா சாதிப்புக்களின் வேரிலும் பக்தியே உள்ளது என்று ராமப்பிரசாதர் ஒரு பாடலில் சொல்கிறார். ஒருவிதத்தில் ராமப்பிரசாதர் தாம் ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆதர்சபுருஷர். 'அம்மா, நீ ராமப் பிரசாதருக்காக வெளிப் பட்டு வந்தாய்; ஏன் எனக்கும் அப்படிச் செய் யக் கூடாது?' என்று குருமகராஜ் வேண்டுவது வழக்கம். ஞானத்தினால் பதமாக்கப்பட்ட பக்திதான் குருமகராஜ் உபதேசித்த வழி.''

**ஜூன் 20**

**சுவாமி துரியானந்தர்:** ''இறைவனின் நாமத் தைச்சொன்ன மாத்திரத்தில் எனது கண்களில் நீர் பெருகும் நாள் எந்த நாளோ? (சீடரை நோக்கி) நாம ஜபம் செய்யும்போது நீ அழுகி றாயா? ஆஹா, அது எத்தகைய உன்னத நிலை! அவன் நாம உச்சாரணமே உன்னை அழ வைப்ப தாக எண்ணித்தான் பரேன்!''

**சுவாமி சிவானந்தர்:** '' குருமகராஜிடம் நான் செல்ல ஆரம்பித்த காலத்தில் எனக்கு அடிக்கடி அழ வேண்டும் போலிருக்கும். ஒரு இரவு மகிழ மரத்தருகே ஆற்றங்கரையில் நான் அப்படியொரு அழுகை அழுதேன்! அதே சம யம் குருமகராஜ் தமது அறையில் இருந்தவர் களிடம் நான் எங்கே போய்விட்டேன் என்று விசாரித்தாராம். நான் அவரிடம் திரும்பிய வுடன்; அவர் என்னை உட்காரச் சொன்னார். 'பகவானுக்கு தன்னிடம் ஒருவன் அழுது விட்

---

*காளிக்குக் கோயில் எடுத்த ராணி ராஸமணியின் மருகர் குருமகராஜுக்கு நிறைந்த பக்தியுடன் தொண்டாற்றியவர் குருமகராஜின் ஆத்மிக சாதனைக் காலத்தில் அவருக்குப் பலவிதங்களில் உதவியாக இருந்தவர்.

டால் மிகுந்த பிரீதி உண்டாகிறது. பக்தியால் பெருகும் கண்ணீரானது, யுகாந்தாரமாகச் சேர்ந்துவிட்ட எல்லா மன அழுக்குகளையும் கழுவித் தள்ளிவிடுகிறது. பகவானிடம் கதறுவது நிரம்பவும் நல்லது' என்று சொன்னார்.

''மற்றொருநாள் நான் பஞ்சவடித்தோப்பில் தியானம் செய்து கொண்டிருந்தேன். மிகவும் ஆழ்ந்த மன ஒருமைப்பாடு ஏற்பட்டது. சரியாக அந்த சமயத்தில் குருமகராஜ் நாவல் மரத்துப் பக்கத்திலிருந்து என்னை நோக்கி வந்தார். அவர் என்னைப் பார்த்ததுதான் தாமதம், நான் கண்ணீரில் வெடித்து விட்டேன். அவர் சலனமின்றி நின்றுவிட்டார். எனது மார்புக்குள் எதுவோ படர்ந்து எழுவதாக உணர்ந்தேன். என்னை மீறிய ஒரு ஆவேசம் என்னைக் குலுக்கி எடுத்துவிட்டது. அந்தக் கதறல் வீணுக்கு அல்ல என்று கூறிய குருமகராஜ், அநுவே ஆனந்தபரவசத்தில் ஒருவகை என்றார். அவரைப் பின்தொடர்ந்து அவரது அறைக்குச்சென்றேன். அவர் எனக்கு சாப்பிடுவதற்கு ஏதோ கொடுத்தார். (சீடரது) குண்டலினியை எழுப்புவது என்பது அவருக்கு வெகு எளிதான ஒருவிஷயமாக இருந்தது. (சீடரை) அவர் ஸ்பர்சிக்கவேண்டும் என்பதுகூட இல்லை, பக்கத்தில் நிற்பதாலேயே இதை அவரால் செய்ய முடிந்தது.''

**ஜூன் 21**

**சுவாமி துரியானந்தர்:** ''மனிதன் சௌக்கியம் பெறுவதற்காகப் படாதபாடுபடுகிறான். ஆயினும் ஆண்டவன் சங்கற்பித்தாலன்றி எந்த முயற்சியும் பலிப்பதில்லை. இரண்டுவிதங்களில் (ஆத்ம) விடுதலை (மோட்சம்) எய்தலாம். ஒன்று, தன்னை இறைவனுடன் இரண்டற ஐக்கியப்படுத்திக்கொள்வது; மற்றது, சாசுவதமாகத் தன்னை அவனுக்கு சரணாகதி செய்து வாழ்வது. அவனுக்குப் புறம்பாக இச்சா சுதந்திரம் என்ற ஒன்று இருக்கமுடியாது.

''தான் என்று வெளியே தோன்றுவதையே ஒருவன் சார்ந்து வாழுவது நாசத்துக்கே அழைத்துச் செல்லும். தனக்கு எல்லாம் தெரியும் என்று நினைத்துக்கொள்வது மிகுந்த துன்பத்திலேயே கொண்டு சேர்க்கும். ஸ்வ—தந்திரம், தன்-நம்பிக்கை என்னும்போது, (அதாவது, இவற்றைப் பாராட்டிச் சொல்லும்போது) 'தான்' என்பது உத்தமமான தானையே (ஆத்மாவையே, ஆண்டவனையே) குறிக்கும். இப்போது எதைத் தானாக நாம் எண்ணியிருக்கிறோமோ அதையே தொடர்ந்து பிடித்து வருவதும், நாமாக ஏற்படுத்திக்கொண்ட கருத்துக்களையே பற்றி வருவதும், இவைகளால் ஏற்படுத்திக்கொள்ளும் சுய முக்கியத்துவமும் கெடுதலானவைகள்.''

**ஜூன் 22**

**சுவாமி:** ''ஒருவனுக்கு அன்பு செய்யும் திறன் இருக்க வேண்டும். ஆஹா, எங்கள் இளமையில் நாங்கள் எப்படிப்பட்ட அன்புவெறி கொண்டிருந்தோம்! எனது சகோதரர்களிடம் எனக்கு இருந்த பேரன்பு காரணமாக அவர்களைவிட்டு சன்னியாசியாக வேண்டும் என்ற எண்ணமே என்னைக் கதற வைத்திருக்கிறது. ஆனால் பிறகு குருமகராஜ் இந்த பந்தங்களை ஒவ்வொன்றாகத் துண்டித்து விட்டார். நீ, யாரிடம் அன்பு வைத்திருக்கிறாய்?' என்று அவர் ச—வைக் கேட்டார். 'நான் யாரிடமும் அன்பு வைக்கவில்லை'' என்று ச-கூறினார். 'ஐயோ, வரண்ட ஆளே!' என்றார் குருமகராஜ்.''

**ஜூன் 24**

**சுவாமி:** ''ஒரு மனிதனை மனிதனாக மட்டும் கருதி மரியாதை செய்தாயானால் உனக்கு ஒருக்காலும் (ஆன்ம) விடுதலை கிடைக்காது. நீ வணங்கும் மனிதரைக் கடவுளாகக் கருத வேண்டும். அவர் ஆன்மிக ஞானத்திலும் வைராக்கியத்திலும் எவ்வளவு பெரியவராக இருப்பினும், அவர் எவ்வளவோ உயர்ந்த ஆன்மிக சக்திகள் படைத்தவராக இருப்பினும், அவரை நீ சாட்சாத் கடவுளாகவே கொண்டாலன்றி, கண்டாலன்றி, அவருக்கு நீ செய்யும் வழிபாடு உனக்கு மோட்சம் அளிக்காது. இப்படிப்பட்ட உணர்வு (வழிபாட்டுக்குரியவரை இறைவனாகவே கொள்ளும் உணர்வு) இல்லாவிட்டால், அவரது வழிபாடு ஏதோ அவருடைய ஆன்ம குணங்களையும் சக்திகளையும் உனக்குப் புலப்படுத்த மட்டும் உதவுமே தவிர, அதற்குமேல் பயன்படாது. (ஆனால்) தெய்வ அவதாரமான ஒரு வியக்தியை நீ வழிபடும்போது அவரை அவதாரம் என்று அறிந்து கொண்டிருந்தாலும் சரி, அறியாவிட்டாலும் சரி, அவர் உனக்கு நிச்சயம் தெய்வ சாட்சாத்காரத்தை அருள்வார். ஸ்ரீகிருஷ்ணனை துவேஷித்தும்கூட சிசுபாலன் சாட்சாத்காரம் பெற்றான். கோபிகை

கள் கண்ணனைத் தமது காதலனுகவே கருதினும் அவர்களுக்கும் கடவுளநுபவமே ஸித்தித்தது. ஒரு கோபிகையை அவளது கணவன் அறையிலே வைத்துப்பூட்டிவிட்டான். கண்ணனிடமிருந்து பிரிந்திருக்கிறேமே என்பதில் அவள் கொண்ட தீவிர வேதனையே அவளது பாபங்களை அழித்து விட்டது; (பிரிவிலும்) அவனைத் தியானிப்பதில் அவள் துய்த்த ஆனந்தம் அவளுடைய புண்யங்களை அழித்து விட்டது. அவள் மோட்சம் பெற்றுள்.''

**சீடர்:** ''ஆனுல் பக்தி மிகவும் தீவிரமானுல் ஒருவர் பகவானின் திவ்ய மகிமைகளையும் மறந்துவிடுவார் என்று சொல்கிறுர்களே!''

**சுவாமி:** ''அது பக்தன் பகவானைப் பிரத்தியக்ஷத்தில் அநுபவித்த பின்பே ஏற்படுவது. இதன்பின் அந்த பக்தர் பகவானை மேலும் மேலும் நெருங்கியிருக்க வேண்டும் என்பதற்காகவே மிகுந்த கவனத்துடன் திவ்ய மகிமைகளைப் பற்றிய உணர்வை நலிவித்துக் கொள்கிறுர். கோபிகைகள் சாமானிய மானுடரல்ல. அவர்களுடைய சரீரமே தெய்விகமானது.... கடவுளநுபவத்துக்கு பிரம்மசரியம் அத்தியாவசியமாகும். ஒருவனுல் இருபத்தெட்டு ஆண்டுகள் பிரம்மசரியம் காக்க முடிந்துவிட்டால், பக்தி ஞானம் முதலான எல்லாவற்றையும் அவன் சாக்ஷாத்கரித்து விடுவான். காமத்துக்கு 'மனஸிஜம்'— மனதில் பிறந்தது—என்று பெயர். வீரன் மட்டுமே புலன்களை வென்று, அவைகளுக்கு அப்பால் உள்ள அதீதாநுபவ நிலைகளுக்குச் செல்ல முடியும்.

''பிடிவாதத்தை பலம் என்று நீ எண்ணினுல் உன்னேடு நான் ஒத்துப்போக முடியாது. பிடிவாதம் என்பது பலவீனத்துக்கே முகமூடி. பலவீனர்கள் தமது பலவீனத்தை மறைக்கவே இதைப் போட்டுக்கொள்கிறுர்கள். உண்மையான பலத்துக்கு எப்படி வளைவது, ஆயினும் தனது நிஜமான நிலைக்கு மறுபடியும் எப்படி நிமிர்வது என்பவை நன்ருகத் தெரியும்.''

**ஜூன் 26**

**சுவாமி:** ''சுவாமி ப—இப்படி எழுதியிருக்கிறுர். 'நாம் வெற்று ஊகத்தின் மட்டத்தில் வாழவில்லை. வாஸ்தவமான அனுபவத்தின் மட்டத்திலேயே வாழ்கிறேம்.' நாம் ஏன் உலகைத் துறந்தோம் என்பதை அவ்வப்போதும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். லட்சியத்தை நோக்கி நாம் உண்மையாகவே முன்னேறி வருகிறேமா என்று நம்மையே சோதித்துப் பார்க்க வேண்டும்.''



# ஞானப் பொறிகள்

## விவேகானந்த வாக்கு

309. அனந்த வஸ்து இரண்டாக இருக்க முடியாது. ஆத்மா அனந்தமாக இருப்பதனுல் ஆத்மா ஒன்றேதான் இருக்க முடியும். பலவேறு ஆத்மாக்கள் – உனக்கு ஓர் ஆத்மா உண்டு, எனக்கு ஓர் ஆத்மா உண்டு – என்றவாறு கருதுவது உண்மையாகாது.

310. நிஜ மனிதன் உள்ளானே, அவன் ஏகன், அனந்தன், சர்வவியாபியான சிதாத்மா. தோற்ற மனிதன், மித்யை மனிதன், உள்ளானே, அவன் நிஜ மனிதனுடைய கட்டுப்பட்ட, வரையறுபட்ட, பகுதியேயாவான். தோற்ற மனிதன், மித்யை மனிதன் எவ்வளவு மகிமை உடையவனுயினும், யாவற்றுக்கும் அப்பாலுள்ள நிஜ மனிதனுடைய மங்கலான நிழல் பிம்பமேயாவான்.

311. நிஜ மனிதன், காரணகாரியம் கடந்த சித்வஸ்து ஆவதனுல், காலதேசத்தால் கட்டுப்படாததனுல், சுதந்திரமானவனே ஆவான். அவன் என்றுமே பந்தப்பட்டதில்லை. பந்தப்பட முடியாதவன். தோற்ற மனிதன், மித்யை மனிதன், சாயைச் சொரூபமாக உள்ளவன், கால தேச காரண காரியங்களுக்குக் கட்டுப்பட்டவன்; ஆகவே பந்தப்பட்டவன். அல்லது நம் நாட்டுத் தத்துவஞானியர் சிலர் கூறுவது போல, அவன் கட்டுப்பட்டவன் போலத் தோன்றுகிறுன்; உண்மையில் பந்தப்பட்டவனே ஆகான்.



# அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

விவேகானந்த தாசன்

புண்டரீகன், மனைவியே கதி என்று வாழ்ந்து வந்தான். அவள் சொன்னபடி அவன் ஆடுவான். பெற்றோர்களிடம் ஒருசிறிதும் அவனுக்கு அன்போ, மரியாதையோ கிடையாது.

ஒருசமயம் அவனும் அவனுடைய மனைவியும் காசிக்குப் பிரயாணம் செய்தார்கள். பிரயாணம் சிலநாட்களுக்குத் தொடர்ந்தது. காசியை அடையச் சில மைல் தூரம் இருந்தபோது இரவு சூழ ஆரம்பித்தது. ஆகவே அவர்கள் இருவரும் வழியிலிருந்த ஒரு கிராமத்தில் தங்கிவிட்டு மறுநாள் காலையில், காசிக்குப் புறப்பட முடிவு செய்தனர். அதன்படியே அவர்கள் ஒரு சிறிய குடிசை வீட்டுத் திண்ணையில் அன்றைய இரவுப்பொழுதைக் கழித்தார்கள்.

மறுநாள் அதிகாலையில் விடிவதற்குச் சற்று முன்பு, புண்டரீகன் தூக்கம் கலைந்து கண் விழித்தான். அப்போது அவன் தங்கியிருந்த குடிசையை நோக்கி மூன்று அழகான பெண்கள் வந்தார்கள். அவர்கள் அந்த வீட்டின் வெளிப்புறத்தைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தமாகத் துப்புரவு செய்தனர். பிறகு சாணம் தெளித்து அழகிய கோலங்களைப்போட்டு அலங்கரித்தார்கள்.

அவர்களுடைய தோற்றங்களையும் செய்கைகளையும் கண்ட புண்டரீகனுக்கு வியப்புத் தாங்க முடியவில்லை. 'இந்த வீடோ மிகமிகச் சிறியது. இந்தக் குடிசைக்குச் சொந்தக்காரர் மிகவும் ஏழையாகத்தான் இருப்பார் என்பதிலும் சந்தேகமில்லை. அப்படி ஏழையாக உள்ள ஒருவர், அரசகுமாரிகளைப்போன்ற மூன்றுபேரை பணிப்பெண்களாக எப்படி வேலைக்கு வைத்துக்கொள்ள முடியும்?' என்று அவன் நினைத்து ஆச்சரியப்பட்டான்.

ஆதலால் அவன் அந்தப் பெண்களை நெருங்கிச்சென்று, ''அம்மா! நீங்கள் யார்? உங்களைப் பார்த்தால் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்களைப்போல இருக்கிறதே! உங்களை வேலைக்கு வைத்துக்கொள்ளக்கூடிய பணவசதி இந்த வீட்டுக்காரருக்கு இருக்கிறதா?'' என்று விசாரித்தான்.

அவனுடைய கேள்விக்குப் பதிலாக அந்தப் பெண்கள், ''ஐயா, நாங்கள் கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் மூன்று நதிகளுடைய தேவதைகள். எங்களுடைய பாவங்களைப் போக்கிக்கொள்வதற்காக இந்த வீட்டில் உள்ள பெரியவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்கிறோம்'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள்.

மறுநாள் காலையில் பொழுது நன்றாகப் புலர்ந்த பிறகு, புண்டரீகன் அந்த குடிசைக்குள் சென்றான். அங்கு ஒரு முதியவர் இருந்தார். புண்டரீகன் அவரை வணங்கிவிட்டு, ''பெரியவரே, காசி இங்கிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறது'' என்று கேட்டான்.

முதியவர், ''அப்பா, காசிக்கு நான் போனதில்லே. அந்த ஊர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்ற விவரமும் எனக்குத் தெரியாது'' என்று சொன்ஞர்.

புண்டரீகன் அவரிடம் பேசி, அவருடைய வரலாற்றைச் சொல்லும்படி வேண்டினுன்.

பெரிய்வர் தம்மைப் பற்றி அதிகமாகச் சொல்ல விரும்பவில்லே. ஒருசில விவரங்களே மட்டுமே அவர் தெரிவித்தார். அதிலிருந்து அவர் பெற்றுள்ள சிறப்புக்கான காரணம் புண்டரீகனுக்கு விளங்கியது. வயதான தமது பெற்ருேர்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளேச்செய்து வந்த காரணத்தாலேயே, அந்த முதியவரின் உள்ளம் பரிபக்குவத்தைப்பெற்று ஒரு மகானின் நிலேயை அடைந்திருந்தது. பெற்ருேர்களுக்கு ஆற்றவேண்டிய கடமைகளேத் தவருமல் செய்துவந்த காரணத்தாலேயே இப்படிப்பட்ட பெரும்சிறப்பை இவர் பெற்றிருக்கிருர் என்பதை அறிந்தபோது, புண்டரீகன் வியப்படைந்து போனுன். அதோடு, தான் தனது பெற்ருேர்களிடம் எப்படி நடந்துகொண்டோம் என்று நிஜனத்தும் அவன் வெட்கப்பட்டான்.

அதுமட்டுமின்றி, காசிக்கு மேற்கொண்டு பயணத்தைத் தொடரும் எண்ணமும் அவனேவிட்டு அகன்றது. தனது பெற்ருேர்களுக்குப் பணிவிடைகளேச் செய்யவேண்டும் என்ற எண்ணத்தால் உந்தப்பெற்றுப் புண்டரீகன் விரைந்து தனது ஊருக்குத் திரும்பினுன்.

ஊர் திரும்பிய புண்டரீகனின் வாழ்க்கையே அடியோடு மாறிவிட்டது. அல்லும் பகலும் அயராமல் அவன் தனது பெற்ருேர்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளேச் செய்தான். அவர்களுக்குப் பணிவிடை செய்வது ஒன்றையே தனது வாழ்க்கையின் தலேயாய இலட்சியமாக வைத்துக்கொண்டான்.

இந்த நிலேயில் ஒருநாள், புண்டரீகன் வழக்கப்படி தனது தந்தைக்குச் செய்யவேண்டிய பணிவிடையில் ஈடுபட்டிருந்தான். அப்போது பகவான் தரிசனம் தந்து, ''உன்னுடைய பெற்ருேர்களுக்கு பக்தி சிரத்தையுடன் சிறந்த முறையில் நீ சேவை செய்திருக்கிருய். உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

அந்த சமயத்தில் புண்டரீகன் தனது தந்தைக்காகச் சில வேலேகளேக் கவனிக்க வேண்டியிருந்தது. ஆகவே அவன் இரண்டு செங்கற்களே பகவானின் எதிரில் வைத்து, ''சுவாமி, இதன்மேல் கொஞ்சநேரம் எழுந்தருளியிருங்கள். இதோ எனது தந்தையைக் கவனித்துவிட்டு விரைவில் வந்து விடுகிறேன்'' என்று சொல்லிக்கொண்டே தந்தையிடம் சென்ருன்.

தந்தையை நீராடச் செய்து, அவரது உடலே ஈரம் நீங்க நன்ருகத் துடைத்துவிட்டான். அவருக்கு வேறு ஆடையை உடுத்திவிட்டான். பிறகு அவரை உணவருந்துவதற்கு அழைத்துச்சென்று, தானே அவருக்கு உணவை ஊட்டினுன். இவ்விதம் தனது கடமைகளே முடித்துக்கொண்டவுடன், புண்டரீகன் பகவான் இருந்த இடத்திற்கு விரைந்து ஓடோடி வந்தான்.

பகவான், அவன் சுட்டிக்காட்டிவிட்டுச் சென்றிருந்த கல்லின்மேலேயே நின்றிருந்தார். அவன் வருவதற்காகக் காத்திருந்தார்!

பகவானைப் புண்டரீகன் பணிந்து வணங்கி, ''சுவாமி, தாமதிக்க வைத்த தற்காக மன்னிக்கவேண்டும்'' என்று மனப்பூர்வமாகக் கேட்டுக்கொண்டான்.

பகவான், ''குழந்தாய்! உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள்'' என்று சொன்னார்.

புண்டரீகன், பெரியோர்களின் இயல்பிற்கேற்ப, தான் பெற்ற இன்பத்தை இவ்வையகமும் பெற விரும்பினன்.

ஆகவே அவன், ''இறைவா, தங்களுடைய தரிசனத்தை அடியேன் பெறும்படியான பாக்கியத்தை எனக்குக் கொடுத்தீர்கள். அதைப்போலவே எல்லா மக்களும் உங்களுடைய தரிசனத்தைப்பெற்று உய்வு பெறும் வகையில், தாங்கள் எப்போதும் இந்தக் கல்லின்மேலேயே எழுந்தருளியிருந்து பக்தர்களுக்குத் தரிசனம் தரவேண்டும். இதையே தங்களிடம் வரமாகப் பிரார்த்திக்கிறேன்'' என்று நா தழுதழுக்கக் கூறினன்.

கருணைக்கடலான பகவான் அவன் கேட்ட வரத்தைக் கொடுத்தார். அந்த இடத்தையே தமது சான்னித்தியமாகவும் வைத்துக்கொண்டார். இப்போதும் அவர் அங்கிருந்து பக்தர்களுக்குத் தரிசனம் தருகிறார். அந்த இடமே பண்டரிபுரம் என்னும் புண்ணிய க்ஷேத்திரமாக பக்தர்களால் கொண்டாடப்படுகிறது.

இவ்விதம் அற்பனுக இருந்த புண்டரீகன் மகோன்னத நிலையைப் பெற, அவன் பெற்றோர்களிடம் கொண்ட பக்தியே காரணமாக அமைந்தது.

'மாத்ரு தேவோ பவ. பித்ரு தேவோ பவ'. தாயைத் தெய்வமாகக் கொண்டிரு. தந்தையை தெய்வமாகக் கொண்டிரு – என்று தைத்தீரிய உபநிஷத்திலுள்ள ஒரு மந்திரம் உபதேசிக்கிறது.



விவேகமற்றவனே! கோவிந்தனை வழிபடு, கோவிந்தனை வழிபடு, கோவிந்தனை வழிபடு. பிறவிக் கடலைக் கடப்பதற்கு நாமஸ்மரணையைத் தவிர வேறு உபாயத்தை நாங்கள் காணவில்லை.

—பஜகோவிந்தம்.

புண்ணியம் பாவம் இரண்டையும் இங்கே விட்டவன், தூய்மையுள்ளவன், இந்த உலகில் அறிவோடு வாழ்பவன்—அவனே உண்மையில் துறவி எனப்படுவான்.

—புத்தர்.

வேறொன்றையும் கருதாது எப்பொழுதும் இடைவிடாமல் கடவுளையே எண்ணிக்கொண்டிருக்கும்படியான வழியில், உங்கள் மனதை நீங்கள் பழகுங்கள். உங்கள் வாழ்நாட்கள் கணக்கிடப்பட்டிருக்கின்றன. அவை வேகமாக ஓடிக்கொண்டிருக்கின்றன. உங்கள் காலத்தை வீணுக்காதீர்கள்.

—சுவாமி பிரம்மானந்தர்.

பயணக் கட்டுரை :

# நாங்கள் சென்ற நற்பயணம்

திருமதி கோகிலா காளஹஸ்தி

**கயா க்ஷேத்திரம்:**

புராதன புண்ணிய க்ஷேத்திரங்களில் முக்கிய மானது கயையும் ஆகும். இங்கே எழுந்தருளி யுள்ள கயாவிஷ்ணு—கதாதரர்தாம், காமார்ப் புகுரில் சந்திரமணி தேவியாரின் மணிவயிற்றில் அவதரித்து ஸ்ரீராமகிருஷ்ணரானார். அங்கே யுள்ள பல்குனி என்ற ஆறு புண்ணிய தீர்த் தங்களில் ஒன்று. இந்த க்ஷேத்திரத்தில்தான் யாத்ரீகர் வந்து தம் மூதாதைகளுக்குப் பிண்ட மிட்டுச் சிராத்தம் செய்து, பித்ருக் கடன்களைக் கழிப்பது வழக்கம். காசி, கயை, ராமேசுவரம் ஆகிய இந்த மூன்றும் முக்கியமான க்ஷேத்திரங் கள் என்பது ஆன்றோர் கருத்து. கயையிலிருந்து ஏழு மைல் தூரத்தில்தான் பகவான் புத்தர் போதி மரத்தடியில் ஞானம் பெற்றார். அந்த இடம் புத்தகயா என்று வழங்குகிறது. கயா விஷ்ணு கோயிலுக்குச் சென்று தரிசித்து வந் தோம்.

நாங்கள் மே 16ஆம் நாள் மதியம் 1.30 மணிக்கெல்லாம் கயா வந்தடைந்தோம். இங் கேயுள்ள பாரத சேவா சமாஜத்தினர் உதவு வர் என்று நினைத்து அந்த இடத்திற்குப்போய்ச் சேர்ந்தோம். எங்கள் கேள்விகளுக்கும் வேண்டு தல்களுக்குமெல்லாம் 'இல்லை, இல்லை' என்றே பதில் வந்தது. எந்தவிதமான உபகாரமும் எங் களுக்குச் செய்ய அவர்கள் இணங்கவில்லை. உணவோ, சிற்றுண்டியோ எதையும் 'இல்லை' என்றே கூறி வந்தனர். மொழி தெரியாமல் நாங்கள் துன்பப்படுவதைக் கூறி உதவி கோரிய போது, 'இந்தி ஏன் கற்றுக்கொள்ளவில்லை?' என்று எங்கள் மேல் குற்றம் சாட்டி அதற்கு மேல் ஒரு குட்டிப்பிரசங்கமும் செய்தனர். வயிற்றுக்கு உணவு இல்லாதபோது செவிக்கு அவர்கள் தந்த உணவு காரமாக, சாரமற்ற தாக இருந்தது.

எங்கள் புண்ணியமோ, எங்களைப் படைத்த வன் புண்ணியமோ எங்களுக்கு மூன்று அறை கள் எப்படியோ கிடைத்தன. காற்று,வெளிச் சம், தண்ணீர், சுத்தம் ஏதுமில்லாத அறைகள் அவை. எப்படியாவது அங்கே இரவைக்கழித்து விடுவோம் என்று சமாதானப்பட்டோம்.

மாலை நான்கு மணிக்குப் புத்த கயாவிற்குப் புறப்படத் தயாரானோம்.

பஸ்ஸில் புத்தகயாவை அடைந்தோம். அங்கே உள்ள புத்தர் ஆலயம் பெரிய கோயில். அதன் பக்கமே அவர் ஞானம் பெற்ற போதி விருக்ஷம் (அரச மரம்) உள்ளது. அங்கிருந்த பௌத்தத் துறவி ஒருவர் யாவற்றையும் எங் களுக்கு விளக்கிக் காட்டினார். புத்தர் தவம் செய்த இடம், தடாகம், ஜப்பானியர், தாய் லாந்தியர் கட்டிய பௌத்த ஆலயங்கள் யாவற் றையும் பார்த்தோம். அங்கே போதிசங்கத் தார் நிறுவியுள்ள விடுதியில் சௌக்கியமாக இரவில் தங்கிப் போகலாமே என்று அந்தப் புத்த பிக்ஷு கூறினார். அப்படி அல்லவா எல் லோரும் உபசரிக்க அறிய வேண்டும்!

எல்லாம் முடிந்ததும் மாலை 7.15 மணிக்குப் பஸ் நிலையம் வந்ததும் எங்களுக்குப் பின்னு மோர் அதிர்ச்சி! கயைசெல்லும் பஸ் 7மணிக்கே போய்விட்டதாம்! கடவுளே கதியென்று ஸ்ரீகுரு தேவரைப் பிரார்த்தித்தோம். உள்ளத் துடிப்பும், என்ன செய்வது என்ற கவலையும் உண் டாகும்போது ஒரு தனிப் பக்தியுணர்வும் வரு கிறது அல்லவா? ஸ்ரீகுருதேவர் அப்போது அருள் பாலிக்கலானார். மினிபஸ் போன்ற ஒருவண்டி யும் ஓர் ஆட்டோவும் எங்கிருந்தோ வந்து சேர்ந்தன! வாடகை பேசி அமர்த்திக்கொண்டு புறப்பட்டோம். வண்டிகள் விரைந்தன. ஆனால் அப்போது கும்மிருட்டு. வழியில் விளக்குகளும் இல்லை; நடமாட்டமும் இல்லை! 'வண்டியில் பழுது ஏற்பட்டால்?' 'வழியில் கயவர் வந்து தாக்கினால்'?—என்ற திகில் உள்ளங்களை அரித் தன. ஸ்ரீகுருதேவர் கருணை செய்வார் என்ற நம்பிக்கையும், தூயஅன்னையார் கைவிடமாட் டார் என்ற உணர்வும், என்னநேருமோ என்ற கவலையும் மாறிமாறி நெஞ்சில் தயிர் கடைவது போன்று இருந்தன. குருதேவர் எப்படியோ உடனிருந்து எங்களை உரிய ஜாகைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்.

இரவு மணி 9.30. முன்பு 'இல்லை' என்ற அதே தொண்டர்கள் இன்முகத்துடன் உண வளித்தனர். அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த

நன்றியைச் செலுத்தி, மன நிம்மதியுடன், உண்டு, உறங்கி, மறுநாள் காலை கல்கத்தாவிற்குப் பயணமாகத் தயாரானோம்.

## கல்கத்தா

கல்கத்தாவில் இரண்டு முக்கியமான ரயில் நிலையங்கள் உள்ளன. ஹௌரா நிலையம் பெரியது; சியால்தா நிலையம் சிறியது. பகல் 3.30க்குச் சியால்தாவை அடைந்தோம். நாங்கள் கொடுத்த தந்தி கிடைக்காதபடியால் எங்களை வரவேற்க, பேலூர் மடத்திலிருந்து யாரும் வரவில்லை என ஊகித்தோம். ஒருமணிநேரம் காத்திருந்தபின்னர் 'லோகல்' வண்டியில் பாலிகாட் நிலையம்போய், அங்கிருந்து பேலூர் மடம் சேர்வது என்ற முடிவிற்கு வந்தோம். ரெயில் வண்டி வந்தபோது நிற்கக்கூட இடமில்லாத நெருக்கடியைக் கண்டோம். எப்படியோ ஏறியபின், பாலிகாட் நிலையம் சேர்ந்தபோது வண்டி நிற்கும் இரண்டு நிமிடங்களில், எல்லோரும் இறங்க முடியாமல் போயிற்று. எங்களில் பத்து பேர் இறங்கிவிட்டனர். மற்றவர் இறங்க முடியாமல் மாட்டிக்கொண்டு ரெயிலிலேயே சென்றுவிட்டனர்! அந்த வண்டி, லோகல் ஆகையால் 'டெர்மினஸ்' போய் திரும்பும்போதுதான் மறுபடி பாலிகாட் நிலையத்தில் அவர்கள் இறங்க முடிந்தது. அப்போது இருட்டான வேளை. இரண்டு பிளாட்பாரங்களிலும் இரண்டு பிரிவினராக நாங்கள் பிரிக்கப்பட்டுத் தவியாய்த் தவிக்க நேர்ந்தது. பின்பு ரெயில்வே சிப்பந்தியின் உதவியால் ஒரு டாக்ஸியில் மூன்றுமுறைகளில் பேலூர் மடம் போய் யாவரும் சேர்ந்தபோது இரவு 9.30 மணி! மடத்து விருந்தினர் விடுதியில் தங்கினோம். உணவிற்குப் பிறகு உறங்கச்சென்றபோது வெகு நேரமாகி விட்டது.

### பேலூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சங்கம் (மிஷன்) இரண்டிற்கும் தலைமை மடம் பேலூரில் இருப்பதால், இது 'பேலூர் மடம்' என்று பொதுவாகக் கூறப்படுகிறது. பேலூர் மடத்தில் வானளாவியுள்ள ஸ்ரீராமகிருஷ்ணர் கோயில் பல விதச் சிற்பக்கலைகளுடன் சோபிக்கிறது. அத்துடன் தூய அன்னையார், விவேகானந்தர், பிரம்மானந்தர் ஆகியோருக்கும் கங்கைக் கரைமேல் கோயில்கள் அமைந்துள்ளன. மடத்திற்கு வெளியே உள்ளது விருந்தினர் விடுதி. நாங்கள் அதிகாலையில் எழுந்து, கங்கையில் நீராடிக் கோயில்களைத் தரிசித்துவிட்டு மடத்தைச் சுற்றிப்பார்த்தோம். ஓடிக்கொண்டிருக்கிறாள் கங்கை. மனதை அடக்கிப் பேரின்பத்தில் லயிக்க முயலுகிறார்கள் அங்குள்ள துறவிகள். இந்தக் காட்சி, 'ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்; ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்' என்ற அடிகளை நினைவூட்டியது. சுவாமி விவேகானந்தர் நிறுவிய இந்த மடம் ஆன்மிக சக்தியைப் பெருக்கும் 'பவர்ஹௌஸ்' போல் அமைந்துள்ளது. ஆம், இது நூற்றுக்கு நூறு உண்மை.

கங்கைப் பிரவாகம், நிழல் தரும் மரங்கள், மரகதப் புல்தரைகள், புள்ளினங்களின் இன்னிசை, மலர்களின் சுகந்தம், துறவியரின் தரிசனம், அமைதி நல்கும் அழகிய கோயில்கள், அடியார்குழாம், ஆகியவையெல்லாம் எங்களை மிகவும் கவர்ந்து, பிரமிக்க வைத்தன. அலைபாயும் நெஞ்சங்களுக்கு அமைதி நல்கும் இந்தப் புண்ணியத் தலத்தைப் பார்க்க, இங்கே சில நாட்கள் தங்க என்ன பாக்கியம் செய்தோமோ என்று எண்ணிஎண்ணி வியந்தது எங்கள் உள்ளம்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் பெரிய கோயில் அற்புதமானது. குருதேவர் எவ்வாறு சர்வமத சமன்வயத்தைப் போதித்தாரோ அதன் சின்னமாக அமைந்துள்ளது இது. இந்துக்களின் கோயில்போன்ற சிற்ப வேலைப்பாடுகள் நிறைய உள்ளன. சர்ச் போன்று நீளமானது. மசூதிகளில் உள்ள டோம்களைப் போன்ற கோபுரங்கள். எல்லாமாக நவீனமுறையில் உருவாகியுள்ள இது, சுவாமி விவேகானந்தரின் கற்பனை. இதற்கு ஸ்ரீமத் சுவாமி விஜ்ஞானானந்தர் வரைபடம் தயாரித்தார். அந்தக் கோயிலினுள் அண்ணலின் உருவம் சிலையாகத்தோன்றவில்லை. புன்முறுவலுடன் எங்களை வரவேற்று ஆசிகூறும் அப்பனைப் போல் அமர்ந்துள்ளார் அண்ணல்.

வெண்மையான சலவைக் கல்லாலான இந்த உருவம் சைதன்யம் நிறைந்து அருள்பொழியும் தெய்வமாகவே அமைந்துள்ளது. அங்கே ஸ்ரீ ராமகிருஷ்ணரையே தரிசிக்கிறோம். அண்ணலை வணங்கித் துதித்துவிட்டுத் தூய அன்னையார் கோயிலுக்குச் சென்றோம்.

கங்கை என்றால் மிகப்பிடிக்கும் தூயஅன்னையாருக்கு. ஆகவே கங்கையை நோக்கியே கோயில் கொண்டிருக்கிறார் நம் பவித்திரமாதா.



பேலூர் மடத்திலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆலயம்

கோயிலினுள் திருவுருவப்படமே உள்ளதாயினும் காண்பவர் உள்ளங்களைக் கவர்ந்து, உள் அழுக்கைப் போக்கி, உயர் அருளைப் பொழிகிறது அம்மாவின் பார்வை. சாந்தமே உருவாகி அங்கே வீற்றிருந்து சாந்தியை நல்குகிறார் நம் அன்னையார். அங்கே வணங்கித் துதித்துவிட்டு இதர ஆலயங்களுக்குச் சென்றோம்.

சுவாமி விவேகானந்தரின் பூத உடல் அக்கினியில் ஹோமம் செய்த இடத்திலேயே அமைந்துள்ளது சுவாமிஜியின் கோயில். தியானத்தில் அமர்ந்த நிலையில் சுவாமிஜி இருக்கிறார். மேல் தளத்தில் பூர்ணகும்பத்தில் பிரணவமூர்த்தியைக் காண்கிறோம். அங்கே அமர்ந்து தியானிக்க வசதிகள் செய்யப்பட்டுள்ளன. அடுத்து குருதேவரின் 'ஞானப்புதல்வர்' என்று போற்றப்பெறும் சுவாமி பிரம்மானந்தரின் திருக்கோயிலில் அவரது விக்கிரகம் அருள் மூர்த்தியாகப் பிரகாசிக்கிறது.

கோயில்களைத் தரிசித்தபின், தலைமையகத்தில் பொதுச்செயலாளரான ஸ்ரீமத் கம்பிரானந்தஜி சுவாமிகளையும், உபதலைவர் ஸ்ரீமத் கைலாஸானந்தஜி சுவாமிகளையும், பின்பு மடத்தின் பெருமைமிக்க தலைவர் பூஜ்ய ஸ்ரீமத் வீரேஸ்வரானந்தஜி சுவாமிகளையும் தரிசித்தோம். எல்லோரும் எங்களைப்பற்றி மிக விசாரித்து ஆசிகளை வழங்கினர். பல்லாண்டுகள் சென்னை மடத்துத் தலைவராக இருந்த ஸ்ரீமத் கைலாஸானந்தஜி சுவாமிகளுக்கு எங்களைக் கண்டதில் மட்டில்லா மகிழ்ச்சி! மடத்திலுள்ள பல முதிய சாதுக்களையும் கண்டு தரிசித்தோம். ஒரு நாள் குருதேவர் உபயோகித்த துணிமணிகள், பொருட்கள் இவற்றைத் தரிசிக்கும் பேறு கிடைத்தது.

நாங்கள் பேலூரில் வசித்த ஒரு வாரத்தில் தினமும் இம்மாதிரிக் கோயில் தரிசனமும், சாதுக்கள் தரிசனமும் செய்து உளம்பூரிக்க வாய்ப்பு கிடைத்தது.

# ஆதி சங்கரர் காட்டும் பாதை

தமிழ்வாணன்

ஆசிரியர்: கல்கண்டு

இன்று இந்தியாவில் எத்தனையோ மதங்கள் இருக்கின்றன. இருந்தாலும் இந்து மதம் என்ற பெயரால் வெளிநாடுகளில் பெரிதும் வழங்கப் படுவது ஆதிசங்கரரின் அத்வைதமாகும். இதற்குக்காரணம், அந்த மதத்திற்காக சுவாமிவிவேகானந்தர் ஆற்றியருளிய அரும் பணியே! அவரால் நிறுவப்பட்ட ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்கள் இன்று உலகு எங்கிலும் அந்தப் பணியை வியக்கத்தக்க முறையில் தொடர்ந்து புரிந்து வருகின்றன.

சங்கரரது உபநிஷத விரிவுரைகளேயோ அல்லது அவர் தாமே இயற்றிய விவேகசூடாமணி



போன்ற முதல் நூல்களேயோ நாம் படித்துப் பார்த்தால், மிகமிக நுணுக்கமான தர்க்க நூல் அறிவும், ஆழமும் தெளிவும் வாய்ந்த ஒர்இணையற்ற சிந்தனை சக்தியும் அவற்றில் வெளிப்பட்டு விளங்குவதை நாம் காணலாம். வடமொழிக் கல்வியிலும், தத்துவக் கல்வியிலும் பல்லாண்டு காலம் பயிற்சி பெற்ற பண்டிதர்களால் மட்டுமே அவற்றை ஒரளவு புரிந்து கொள்ளமுடியும்.

ஆனல், சங்கரரின் கருத்து ஆழத்தை முழுமையாகப் புரிந்துகொள்வதற்கு வெறும் கல்வி அறிவு மட்டும் போதாது. அதோடு ஒரளவு ஞானப் பயிற்சியும் இருக்கவேண்டும். அல்லது அத்தகைய ஞானப்பயிற்சி உடையவர்களை நாம் அடுத்து இருந்து பாடம் கேட்கவேண்டும். இல்லாவிட்டால், சங்கர அத்வைதத்தின் உண்மையான உட்பொருள்கள், நமக்கு அவ்வளவு தெளிவாக விளங்கமாட்டா!

பொதுவாக எல்லாச் சமயநூல்களுக்குமே இந்த விதி பொருந்தும். என்றுலும், சங்கரரின் நூல்களுக்கு அது இன்னும் மிகுதியாகப் பொருந்தும்.

காரணம், இன்று உலக வாழ்வில் எதை எதை உண்மை என்று நாம் நம்பிக் கொண்டிருக்கிறேமோ, அதையெல்லாம் உண்மை அல்ல என்று ஒரே யடியாக மறுத்துரைக்கிறது சங்கர அத்வைதம்.

### நமது அறிவை மறைக்கும் திரை

எடுத்துக்காட்டாக, உலகில் உள்ள பெரும்பாலான மதங்கள், இந்த உலகத்தை ஒரு மெய்ப்பொருளாகவே ஒப்புக்கொள்கின்றன!

இதற்கு மாருக, ‘இந்த உலகமும், இதில் உள்ள பொருள்கள் அனைத்தும் வெறும் பொய்த் தோற்றங்களே’ என்று வலியுறுத்துகிருர் சங்கரர். ‘கடவுளும் உயிர்களும் வெவ்வேறு அல்ல. இரண்டும் ஒன்றே’ என்பது அவரது இறுதிமுடிவு. இவையெல்லாம் நாம் பொதுவாக நம்பிக்கொண்டிருக்கிற கொள்கைகளுக்கு முரண் ஆனவை அல்லவா? ஆதிசங்கரர் இந்தக் கூற்றைத் தம் ஒப்புயர்வற்ற தர்க்க வாதங்களால் மெய்ப்பித்திருக்கிருர்.

எனினும், அந்த வாதங்களின் உண்மையை நாம் அனுபவத்தில் உணர்ந்துகொள்ள வேண்டுமானுல், நம்முடைய புலன்களுக்கும் மனதிற்கும் நாம் சிறிது பயிற்சி கொடுக்க வேண்டும். அது என்ன பயிற்சி, அதை எப்படி மேற்கொள்வது என்பதையும்கூடச் சங்கரர் விரிவாக விளக்கியிருக்கிருர்!

எனவே சங்கருடைய பாதையை நாம் சரிவரப் புரிந்துகொள்ள வேண்டுமானுல் அதைப்

பற்றிப் படித்தால்மட்டும் போதாது. பயிற்சியும் செய்ய வேண்டும். அப்படி அவருடைய பாதையைப் புரிந்துகொண்டு நமக்கு ஆகவேண்டியது என்ன என்கிறீர்களா? இந்த உலக வாழ்வில் காணப்படுகிற துன்பங்கள் அனைத்திலிருந்து விடுபடுவதும், இந்த உலகில் இன்பங்கள் அனைத்துக்கும் மேலான ஒரு பெரிய இன்பத்தை நிலையாக எய்துவதுமே—அடையத் தகுந்த பயன்கள் என்று சொல்லப்படுகிறது. இதைவிட மேலான பயன்கள் வேறு ஏதாவது இருக்கிறதா

வாழ்வில் நமக்கு ஒரு துன்பம் போனால் இன்னொரு துன்பம் வருகிறது. ஒரு பிரச்னை தீர்ந்தால் இன்னொரு பிரச்னை முளைக்கிறது! இது போகட்டும்.

நாம் ஆசையோடு விரும்பிப் பாடுபட்டு, அடைகின்ற எந்த இன்பமாவது நமக்குக் கடைசிவரையில் நிலைத்து நிற்கிறதா? இல்லை.

ஒன்று நமது இன்பத்துக்குரிய பொருளே போய்விடுகிறது. அல்லது, பொருள் போகாமல் இருக்குமானால், அதன்மீது நமக்கு இருந்த பிரியம் குறைந்து விடுகிறது. பிரியம் குறையக் குறைய, அந்தப் பொருள்மீது நமக்கு அலுப்பு தட்டுகிறது. அலுப்பு என்பது துன்பத்தின் துவக்கமே!

அதாவது முதலில் எந்தப் பொருள் நமது இன்பத்துக்குக் காரணமாக இருந்ததோ, அதுவே பின்னால் நம் துன்பத்துக்குக் காரணமாக மாறுகிறது!

உடனே இன்பத்துக்காக நாம் வேறு ஒரு பொருளை நாடிச் செல்லத் தலைப்படுகிறோம். ஆனால் அந்தப் புதிய பொருள்களும் இப்படிதான் சிறிது காலத்திற்குப்பிறகு நமக்குத் துன்பத்தை தரப்போகிறது என்பதை நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. அப்படி எண்ணிப்பார்க்க முடியாதபடி நம் அறிவில் ஏதாவது ஒரு திரை விழுந்து மறைத்துக் கொண்டிருக்கிறதா?

'ஆம்' என்கிறார் ஆதிசங்கரர். அந்தத் திரைக்கு அவர் அவித்தை என்று பெயர் கொடுக்கிறார்.

நம் அறிவில் தெளிவு உண்டாகாதபடி தடுத்து, நல்லதைக் கெட்டது என்றும், கெட்டதை நல்லது என்றும், நாம் நம்பி மயங்கும்படி நம் அறிவைக் குழப்பி நம்மை எல்லாவகையான துன்பங்களுக்கும் ஆளாக்கி வைப்பது இந்த அவித்தையே ஆகும்.

ஆகவே, நாம் எப்பாடுபட்டாவது நமது அவித்தையைப் போக்கிக்கொண்டு விடுவோமானால் அப்புறம் வாழ்வில் நமக்குத் துன்பமே ஏற்படாது. எல்லாம் இன்பமயமாகவே இருக்கும்!

**துன்பங்கள்**

'மனிதனாய்ப் பிறந்தவன் மாபெரும் பேறு பெற்றவன்' என்னும் ஆசிஉரையோடு 'விவேக சூடாமணி' என்ற தம் அரிய நூலைத் தொடங்குகிறார் ஆதிசங்கரர்.

மனிதர்களில் எல்லாராலும் அவித்தையைப் புரிந்துகொள்ள முடியுமா? அப்படியே புரிந்துகொண்டாலும் அதைப்போக்கிக்கொள்ள முடியுமா? அவித்தையைப் புரிந்து கொள்வதற்கும் அதைப்போக்கிக்கொள்ளும் முயற்சியில் ஈடுபடுவதற்கும் சில தகுதிகள் உண்டாகியிருக்க வேண்டும். அதோடு, 'இந்த உலகியல் துன்பங்களிலிருந்து எப்படியும் விடுபட்டே தீருவது' என்னும் வேட்கையும் நம்மை வலுவாக ஊக்குவிக்கவேண்டும். அந்த ஊக்கம் உண்டாகாத வரையில், நாம் எத்தனை பிறவி எடுத்தாலும் நம்மால் கடைத்தேற முடியாது!

துன்பங்களிலிருந்து விடுபட வேண்டும் என்னும் வேட்கை நமக்கு எப்போது உண்டாகிறது? நாம் இன்பங்களை நுகர்ந்து கொண்டிருக்கும் சமயத்தில் அத்தகைய எண்ணமே நமக்கு எழமாட்டாது! துன்பங்கள் வரவேண்டும், அந்தத் துன்பங்களும் எளிதில் தீர்க்கப்படாதவையாய் நம்மைத் திக்குமுக்காடச் செய்பவையாய் இருக்கவேண்டும். அப்போதுதான் இவற்றிலிருந்து ஒரேயடியாய் விடுதலை பெறுவது எப்படி என்ற சிந்தனையில் நம் மனம் செல்லத் தொடங்கும்.

இரவு முழுவதும் நாம் தீயகனவு கண்டுகொண்டே இருப்பதாய் வைத்துக்கொள்வோம். அது நமக்கு எவ்வளவு வேதனையாய் இருக்கும்? அந்த வேதனையிலிருந்து விடுபட வேண்டுமானால் நாம் விழித்துக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் விழிப்போ வரமாட்டேன் என்கிறது!

இதற்கு என்ன செய்வது?

தீய கனவுகளுக்கு இடையே சில இன்பக் கனவுகளும் கண்டு கொண்டிருப்போமானால்

நாம் எளிதில் விழிக்கமாட்டோம். ஆனல் ஒரு புலி நம்மைத் துரத்துவதாகக் கனவு காண்போமானல், அப்போதே நாம் அலறியடித்துக் கொண்டு விழித்துக்கொள்வோம்!

இந்த உலகியலில் நாம் அடையும் இன்பதுன்பங்கள் அனைத்தும் வெறும் கனவுகளைப்போன்றவையே என்பது சங்கரர் கருத்து. கனவுகள் அவை அனுபவிக்கப்படும்போது மெய்போலத் தோன்றுகின்றன. ஆனல் விழித்துக் கொண்டவுடனே அவை அத்தனையும் பொய்யாகி விடுகின்றன.

இதுபோல, அவித்தை என்னும் உறக்கத்தில் நாம் ஆழ்ந்திருக்கும் வரையில், வாழ்வில் நாம் அனுபவிக்கும் இன்பங்களும் துன்பங்களும் மெய்போலத் தோன்றுகின்றன. அவித்தை நீங்கி நாம் விழிப்படைந்துவிட்டால், அவை அத்தனையும் பொய்யாகப் போய்விடும் என்பதில் ஐயமே இல்லை!

உறக்கத்திலிருந்து விழிப்பு அடைவதற்குப் புலி நம்மைத் துரத்துவது போன்ற ஒரு பொல்லாத கனவு தேவைப்படுகிறது அல்லவா?

இதேபோல, அவித்தையிலிருந்து நாம் விழிப்பு அடைவதற்கும் நம்மால் சமாளிக்க முடியாத பொல்லாத துன்பங்கள் நமக்குத் தேவைப்படுகின்றன. எனவே, துன்பங்கள் என்பவை இறைவன் நம் மீது கருணைகூர்ந்து பொழிகின்ற திருவருள் மழையே!



அற்றது பற்றெனின் உற்றது வீடு

—தமிழ்நாடு

பிரணவப் பொருளும் மகா புருஷனும் குணங்கள் மலருமிடமும், அனந்தனும், இந்திரியங்களுக்கு எட்டாதவனுமாகிய பகவானுக்கு நமஸ்காரம்.

—பாகவதம்

மரத்தின் பொந்துகளில் தேன்கூடு இருப்பதைப்போல நமது இதயக் குகையில் ஈசன் என்னும் ஆனந்தத் தேன் இருக்கிறது.

—ஞானரத்நாவளி.

பிறன் வயப்பட்டிருப்பதிலினும் மேலான துன்பமும் இல்லை. தன்வயப்பட்டிருத்தலினும் மேலான இன்பம் இல்லை.

—சுக்கரநீதி.

அன்பு மயமான சொற்கள் எவன் வாயிலிருந்து வெளிவருகின்றனவோ, அவனே மக்களுள் தலைசிறந்தவன். இரு கைகளாலும் நல்லவையும் அன்பும் பக்தியும் நிரம்பியவான காரியங்களை யார் செய்கிருனே அவனே மக்களுள் தலைசிறந்தவன்.

—பார்ஸி சமயம்

தன்னடக்கம் பழகாதவர், துர்நடத்தை உடையவர், மன அமைதி பெருதவர், தியானம் பழகாதவர், சஞ்சலப்பட்டுக் கொண்டிருப்பவர் பெரும் படிப்பாளிகளாயிருந்தாலும் ஆத்மனை அடைய முடியாது. உள்ளம் தெளிந்தவர், தூய வினையாற்றுபவர்கள், புலனடக்கம் பழகியவர்கள் இத்தகைய பண்பாடுடையவர்களுக்கே பரமாத்மன் தன்னைக் காட்டி அருள்கிருன்.

—கடஉபநிஷதம்.

நீள்கடல் சூழ் இலங்கைக் கோன்; தோள்கள் தலை துணி செய்தான்;
தாள்கள் தலையில் வணங்கி; நாள்கடலை கழிமினே;
நாடீர் நாள்தோறும்; வாடாமலர் கொண்டு;
பாடீர் அவன் நாமம்; விடே பெறலாமே;

—நம்மாழ்வார்.

# பரமார்த்தப் பிரசங்கம்

**சுவாமி விரஜானந்தர்**

254. **ம**ந்திர ஜபம், திவ்விய நாம ஜபம், தியானம், பகவதாராதனை ஆகியவைகள் சாதகர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கின்றன. காரணம் மீண்டும் மீண்டும் ஆவிருத்தி செய்வதாலும், தொடர்ந்த பழக்கத்தின் மூலமும் ஈசுவர ஸ்மரணம் மனனம் ஆகியவைகள் உள்ளத்தில் திடப்பட வேண்டும் என்பதற்காகத்தான். இதனால்தான் இஷ்டதேவதையின் மந்திரத்தை மீண்டும் மீண்டும் நீண்டநேரம் தினந்தோறும் மானஸிகமாக ஜபிக்க வேண்டுவது அவசியமாகிறது.

நாம் எந்த விஷயங்களுடன் தொடர்ந்து உறவு கொண்டிருக்கிறோமோ அல்லது எந்த விஷயங்களைப் பற்றித் திரும்பத் திரும்ப சிந்திக்கிறோமோ, அந்த விஷயங்கள் உள்ளத்தில் பதிந்துவிடுகின்றன. அவைகள் உள்ளத்தை விட்டு விலகி விடுவதைப்போலத் தோன்றினாலும், சூட்சுமநிலையில் சம்ஸ்காரங்கள் என்னும் வடிவத்தில், பழைய வாசனைகளாகத் தங்கியே இருக்கின்றன. சாதகமான சூழ்நிலை வரும்போது, அவை மக்களை அவர்கள் அறியாமலே சிந்திக்கவும் செயல்களில் ஈடுபடவும் தூண்டுகின்றன.

தீய சம்ஸ்காரங்கள் பலமாக இருந்தால் தீய முறையில் தூண்டும். நல்ல சம்ஸ்காரங்கள் மிகுந்திருந்தால் நல்ல முறையில் தூண்டும். ஆகவே தீமை செய்பவர்கள் படிப்படியாக மேலும் மேலும் தீய செயல்களைச் செய்வதையும், ஆத்ம பரிபாகத்திற்காக முயற்சிப்பவர்கள் அந்தத் துறையில் வேகமாக முன்னேறுவதையும் நாம் பார்க்கிறோம்.

255. **பி**ரம்மாண்டத்தில் உள்ள சக்தி அனைத்தும் எப்போதும் ஒரேமாதிரிதான் இருக்கிறது. அது கூடுவதும் இல்லை. குறைவதும் இல்லை. அழிக்கப்பட்டுப் போவதும் இல்லை.

ஆனால் அதற்கு மாறுதல்கள் உண்டு. பல்வேறு வழிகளில் அது வடிவத்தில் வேற்றுமை அடைகிறது. அவ்வளவுதான்.

நாம் செய்யும் செய்கை, எண்ணும் எண்ணம்—அது நல்லதாகயிருந்தாலும் சரி, கெட்டதாக இருந்தாலும் சரி— இவை அனைத்தின் ஒரு பகுதியும்கூட வீணாவதில்லை. நஷ்டமடைவதில்லை. அது சூட்சுமமான வகையில் சுறுசுறுப்பாகவே தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. அல்லது, அது சேமித்து வைக்கப்பட்டுத் தக்க சமயம் வந்ததும் மீண்டும் சுறுசுறுப்படைகிறது. ஆகவே நம்முடைய கர்மத்தின் நல்ல பலனையோ கெட்ட பலனையோ நாமே பெறவேண்டியவர்களாக இருக்கிறோம். அது மட்டுமல்ல, இவ்விதம் சேமிக்கப்பட்ட ஒருவருடைய சிந்தனையோ செயலோ மற்றவர்களையும் பாதிக்கலாம். பிறருக்கும் துன்பத்தையோ இன்பத்தையோ விளைவிக்கலாம்.

256. **சு**வாமி விவேகானந்தர் கூறியதாவது: கிரியைச் சக்தி, சிந்தனைச் சக்தி ஆகியவைகளில் பலவகையான ரகங்களை எல்லாம் நாம் நம்மை அறியாமலேயே உலகில் பரப்பி வருகிறோம். இவைகள் பிரபஞ்சவானத்தில் (விசுவ ஆகாசத்தில்) அலை வடிவத்தில் சென்று கொண்டேயிருந்து, தம்மைப்போலவே துடிப்பதிர்வுகளைக் கொண்டுள்ள ஒரு மனிதனுடன் தொடர்பு கொண்டால் அவன்மீது செயல்படுகின்றன. அந்த மனிதனுக்கு அவைகள் தாம் கொண்டு செல்லும் அதே கருத்துக்களைத் தந்து ஊக்குவிக்கின்றன. அவனுக்குள் வலிமையை உட்செலுத்துகின்றன. தம்மைப்போன்ற தன்மைகளையே கொண்ட அந்த மனிதனிடமிருந்து அவைகளும் புதிய வேகத்தை, புதிய தூண்டுதலைச் சேமித்துக் கொள்கின்றன.

மேலும் சஞ்சாரவட்டத்தைப் பூர்த்தி செய்த பிறகு, அவைகளே தாம் புறப்பட்ட மூலஸ்தானத்திற்கு மேலும் அதிக வலிமையைச்சேர்த்துக்கொண்டு திரும்பி வந்து சேருகின்றன. ஆகையால்தான், நாம் யாருக்காவது தீமை செய்தால், யாரையாவது துன்பப்படச் செய்தால், அதேபோன்ற பலனை, என்றைக்காவது ஒருநாள், இந்தப் பிறவியிலோ, இன்னொரு பிறவியிலோ பெற்று அனுபவித்தாக வேண்டும்—இது இயற்கை விதி. இதிலிருந்து யாருமே தப்ப முடியாது.



# போய்விட்டு வா

கல்வி கேள்விகளில் சிறப்புற்றிருந்த நிவேதிதா தேவி, தம்முடைய பொதுப்பணியின் ஓர் அம்சமாகச் சொற்பொழிவாற்றுவதையும், நூல்கள் வரைவதையும், பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதுவதையும் புனிதக் கடமையாகச் செய்துவந்தார். கல்கத்தாவில் அவர் காளியைப் பற்றியும் காளி பூஜையைப்பற்றியும் இரண்டு பிரசங்கங்கள் செய்தார். மேனாட்டு மாது ஒருத்தி காளிதேவியைப் பற்றி விமரிசனம் செய்தது மக்களிடையே ஒரு பரபரப்பை உண்டு பண்ணிற்று. வங்கத்தில் காளி உபாசனையில் ஆர்வம் மிகுந்தவர்கள் பலர் இருந்தனர். நவீனக் கல்வியில் மோகித்தவர்கள் சிலர் காளி வழிபாட்டைப் பற்றி அரைகுரையாக விஷயம் தெரிந்துகொண்டு அதைக் குறை கூறியும் வந்தனர். காளி தத்துவத்தைப் பரிபூரணமாகப் புரிந்துகொள்வது சமய சாதனையில் முன்னேறியவர்களுக்கே சாத்தியமாகும். காளியின் கோர ரூபத்தின் தத்துவம் பலருக்கு விளங்காது. ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் காளியை ஆராதிப்பதில் கரைகண்டவர். சுவாமி விவேகானந்தரும் தம்முடைய குருவின் கடாட்சத்தால் காளியின் மகிமையை நன்கு உணர்ந்துகொண்டவர்.

1899 பிப்ரவரி 13ஆம் நாளன்று ஆல்பர்ட் ஹால் என்ற கூடத்தில் காளியைப்பற்றி நிவேதிதா உரையாற்றுவதற்குத் திட்டமாகியிருந்தது. பேருக்கத்துடன் நிவேதிதா, காளிதேவி பற்றிய புள்ளி விவரங்களையெல்லாம் சேகரித்து, உரையைத் தயாரித்து, விவேகானந்த சுவாமிகளிடம் அதைக் காட்டினார். சுவாமிகளும், உரை சரியாக அமைந்திருந்ததாகச் சொல்லித் தம்முடைய ஒப்புதலைத் தெரிவித்தார்.

பிரசங்க தினத்தன்று ஆல்பர்ட் ஹாலில் எள்ளுப் போட இடமின்றி ஜனத்திரள் நிறைந்திருந்தது. பிரமுகர்கள் சிலரும் வந்திருந்து கூட்டத்தில் பேசினர். டாக்டர் சர்க்கார் என்ற பிரமுகர், காளி வழிபாட்டைக் கண்டனம் செய்து பேசினார். ''எங்கள் நாட்டிலுள்ள மூட நம்பிக்கைகளை அகற்றுவதற்கு நாங்கள் பெரு முயற்சி செய்து கொண்டிருக்கும் பொழுது, நிவேதிதா தேவி அந்த மூடநம்பிக்கைகளையே வலுப்படுத்தும் முயற்சியில் இறங்கியிருப்பது வருந்தத்தக்கது'' என்று அவர் சொன்னார். பரதேசச் சீமாட்டி காளியைப் போற்றுவதும், சுதேசச் சீமான் காளி நிந்தனை செய்வதும் ஜனங்களுக்கு வியப்பைத் தந்தது. கூட்டத்திலிருந்த காளி பக்தர் ஒருவர் எழுந்து டாக்டர் சர்க்காரைப் பலமாகத் திட்டிப் பேசினார். கூட்டத்தில் குழப்பம் மிகுந்தது. இடையிடையே நிவேதிதா தேவியே முன்வந்து சபையினரை சாந்தப்படுத்தினார். இந்தக் காளிப் பிரசங்க அனுபவத்தை அவர் ஒரு விநோத சம்பவமாக ஏற்று ரசித்தார்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பின்னர் காளி கட்ட ஆலயத்தில் காளி வழிபாடுபற்றிப் பேச வேண்டுமென்று நிவேதிதாவிற்கு அழைப்பு வந்தது. அவர் இந்த அழைப்பைத் தான் ஏற்பது சரியாகுமா என்று விவேகானந்த சுவாமிகளை யோசனை கேட்டார். கட்டாயம் ஏற்குமாறு சுவாமிகள் ஆலோசனை கூறினார். இந்திய நாட்டில் நிலவிய குறுகிய மனப்பான்மையைப் போக்குவதற்கு, நிவேதிதா காளி கோயில் சென்று காளி வழிபாட்டைப் பற்றிப் பேசுவது உபகாரமாயிருக்கும் என்பது சுவாமிகளின் நோக்கமாக இருந்தது.

விவேகானந்த சுவாமிகளிடம் உபதேசம் கேட்டுக் கேட்டு நிவேதிதாதேவி காளியம்மையின் தத்துவப் பொருளை நன்கு உணர்ந்திருந்தார். பிரம்மமும் சக்தியும் ஒன்றே. எவ்வாறு தீயும் அதன் சூடும் இணை பிரியாத ஒன்றோ, பாலும், வெண்மையும் எவ்வாறோ, அவ்வாறே பிரம்மமும் சக்தியும் ஒன்று என்று ஸ்ரீராமகிருஷ்ணர் விளக்கம் தந்துள்ளார். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து சேர்ந்த பொழுது, இளைஞரான நரேந்திரர் காளிதேவியை ஏற்காதவராகத்தான் இருந்தார். ஆனால் பரமஹம்ஸதேவர் அவரைப் பராசக்திக்கு அர்ப்பணமாக்கிவிட்டார். அதன் பின்னர் காளிதேவியே தம்மை ஒவ்வொரு கணமும் ஒவ்வோர் அடியிலும் ஆட்கொண்டு இயக்கி வருவதை விவேகானந்தர் பிரத்தியட்ச உணர்வுடன் உணர்ந்தார். அவருக்குக் காளி தேவியிடம் வளர்ந்திருந்த ஈடுபாடு நிவேதிதையின் உள்ளத்தையும் கவர்ந்து கொண்டது.

ஆகவே அவர் காளிகட்ட ஆலயத்தில் காளி தேவியைப் பற்றிப் பேசுவதற்கு இணங்கியதில் பொருத்தம் மிக இருந்தது. 1899 மே 28 ஞாயிறு அன்று மாலை 5 மணிக்கு அவருடைய பிரசங்கம் ஏற்பாடாயிற்று. காலில் பாதரட்சை அணியாமலேயே நிவேதிதா, ஆலயம் வந்து சேர்ந்தார். மூவாயிரம் பேர்கள் கோயில் மண்டபத்தில் குழுமியிருந்தனர். மேனாட்டு மாதர் சிலரும் பாதரட்சையை நீக்கிவிட்டு மற்றவருடன் தரையில் அமர்ந்தே பிரசங்கத்தைக் கேட்டு மகிழ்ந்தனர். உணர்ச்சி வளமும் சிந்தனைச் செல்வமும் கவிதையழகும் மண்டியதாக அந்தச் சொற்பொழிவு சபையினரை உருக்கிவிட்டது.

காளிகட்டத்தின் புனிதத் தன்மையையும் பெருமையையும் அவர் விளக்கினார். துர்க்கை, ஜகத்தாத்ரி, காளி ஆகியோருடைய அருட் சக்தியை விரித்துரைத்தார். அன்பும் அழகும் ஆனந்தமும் ஆன காளிமாதா பயங்கரியாகவும் கோரசொரூபிணியாகவும் காட்சி தருவதனுடைய உட்பொருளைத் தெளிவுபடுத்தினார். காளியன்னை எங்கும் வியாபித்திருந்து எல்லா ஜீவன்களையும் தன்னுடைய குழந்தைகளாகப் போஷித்து வருவதை அவையிலுள்ளோருடைய உள்ளத்தில் பதியுமாறு பாராட்டிப் பேசினார். மேனாட்டு அம்மை ஒருத்தி, காளியிடம் இவ்வளவு ஆழ்ந்த அன்பும், காளிபற்றிய இவ்வளவு பரந்த அறிவும் கொண்டிருந்தது மக்களுக்கு ஒரே வியப்பாக இருந்தது.

வானம் இருண்டு, கருமேகங்கள் நாற்றிசையிலும் பரவி, மின்னல் வெட்டி, இடி முழங்கி, மழை பொழிந்து, புயல் வீசி, பிரபஞ்சமே நிலைகலங்கிக் குமுறும் காட்சியில் காளியின் கோர தாண்டவத்தையே கண்டு போற்றுவது நிவேதாதேவியின் நற்பழக்கமாயிற்று. ''காளியன்னை'' என்ற சிறு நூலொன்றை அவர் வரைந்தார். அதில் பல உயர்ந்த அத்தியாத்துமக் கருத்துகளும் தத்துவ விளக்கங்களும் வெகு அழகான நடையில் உள்ளத்தில் பதியும் வண்ணம் விளக்கப்பட்டுள்ளன.

* * *



:சுவாமி விவேகானந்தரும் சீடர்களும் (சுவாமிக்கு இடது புறமிருப்பவர் நிவேதிதா).

தியின் சமீபத்தில் இருந்தால், நம்மில் சூடு ஏறியே தீருமல்லவா? அவ்வாறு, ஞானத்தீயாகிய விவேகானந்த சுவாமிகளின் முன்னிலையில் நிவேதிதாவின் உள்ளம் வெந்து, பக்குவப்பட்டு. கனிவும் முதிர்ச்சியும் பெற்றது. அதற்கான சில சான்றுகளை இங்கு எடுத்துரைப்பது பொருத்தமாகும்.

பாரத மக்களின் நலனுக்காகப் பல வகைகளிலும் உழைத்துவந்த நிவேதிதா, சிந்தனைக்கு இடையில், பிரசங்கங்களுக்கு இடையில், உழைப்புக்கு இடையில் தம்முடைய ஆத்ம சாதனையைக் கைவிடவேயில்லை. ஆத்ம ஜோதியாக விளங்கிய சுவாமி விவேகானந்தரின் சங்க பாக்கியத்தை அவர் மிகமிக ரசித்தார். அதை வெகு நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார். ''கடமையை ஆற்றி முடிப்பதிலேயே தர்மம் அடங்கியுள்ளது. தியாகமின்றிப் புண்ணிய வாழ்வு இல்லை'' என்பது அவருடைய கோட்பாடாக இருந்தது. ஒரு சிறந்த பிரம்மசாரிணியையொத்துத் தூய்மை, எளிமை, கடுநெறி ஆகியவற்றை அவர் பயின்று வந்தார். தவ வாழ்வுக்கு உதவுகின்றவாறு பாலும் பழமுமே உட்கொண்டும் வெறும் பலகைமீது சயனித்தும், கோடையிலும் விசிறியின் உதவியை நாடாமலும் அவர் சாதனை செய்து வந்தார். சுவாமி விவேகானந்தரை சந்தித்த பொழுதெல்லாம் புதிய புதிய கருத்துக்களை உள்ளத்தில் ஏற்று உவகையுற்றார். உயர்ந்த இலட்சியங்களை நடைமுறைக்கு ஏற்ப அமைப்பதாகக் கூறிக்கொண்டு இலட்சியங்களின் கூர்மையை மழுங்கப் பண்ணுவது சுவாமிகளுக்கு ஒவ்வாத ஒன்று. ஸ்ரீராமகிருஷ்ண சங்கம் கத்தி முனை போன்ற நெறியில் இயங்கவேண்டும் என்பது அவரது அவா. இதை நன்குணர்ந்த நிவேதிதா, தன்னை நைஷ்டிகப் பிரம்மசரிய விரதத்தில் லயிக்கச் செய்யுமாறு சுவாமிகளை வேண்டிக் கொண்டார். சுவாமிகளும் அருள் புரிந்தார். நிவேதிதாவுக்கு, இஷ்டப்படி மக்களுடன் பழகவும் சமுதாய வாழ்வில் கலந்துகொள்ளவும் சுவாமிகள் சுதந்திரம் தந்திருந்தார். ஆனால் பாரத கலாசாரத்தையும் சனாதன தர்மத்தையும் பரிபூரணமாக நிவேதிதா உட்கொள்ள வேண்டுமென்று அவர் விரும்பினார். நிவேதிதாவின் தேவைகளும் கருத்துக்களும் பழக்கங்களும் சிந்தனைகளும் ஹிந்து மெருகு ஏறிப் பிரகாசிக்க வேண்டும் என்பது அவருடைய நோக்கம். புராதன வைதிக நெறியுடன் நவீன முற்போக்கும் கலந்து சோபிக்க வேண்டும் என்பது அவருடைய ஆசை. சத்குரு ஒருவர் நற்சீடருக்குப் போதனை தந்து தந்து, சீடரைப் பக்குவப்படுத்துவதுபோல சுவாமிகள் நிவேதிதாவுக்கு நல்லுரையாற்றி வந்தார். தீவிரமான கட்டுப்பாடும் சம்பூர்ண சுதந்திரமும் கலந்து ஜொலித்தது சுவாமிகள் உபதேசித்த ஜீவிய சாதனை. இந்திரிய நிக்கிரகத்தை அவர் வலியுறுத்திக் கூறினார். தொன்மை மிகுந்த பாரத சமுதாயம் பிற நாட்டுப் பெண்ணான நிவேதிதாவைத் தன்னுடைய சுய அங்கமாக ஏற்றுக் கொள்வதற்கான பலமுறைகளை அவர் கையாண்டார். ஹிந்து ஆசார அனுஷ்டானங்களின் உட்பொருளையும் அடிப்படைத் தத்துவங்களையும் நிவேதிதா நன்கு புரிந்துகொண்டு அவற்றை மிக மதித்துப் போற்றவே செய்தார்.

சன்னியாச ஆசிரமத்தில் சேர்ந்துவிடவேண்டுமென்ற அவா நிவேதிதாவுக்கு ஒரு சமயம் உதித்ததானாலும் சுவாமிகள் அவரை பிரம்மசாரிணியாகவே வாழ்ந்து வருமாறு பணித்தார். ஆகவே நிவேதிதா என்றுமே காவியுடை ஏற்கவில்லை. ஆனால் துறவுக்கான நற்பண்புகள் — தியாகப்பற்று, சேவைஆர்வம், முதலியன அவரிடம் நிறைய இருந்தன என்பதில் ஐயத்திற்கே இடமில்லை. சுவாமிகளுடைய வாழ்க்கைத் திட்டப் பணியை முன்னேறச் செய்வதற்கு நிவேதிதா ஊக்கத்துடனே தம்முடைய வாழ்நாளெல்லாம் உழைத்தார். மாதர் இனத்தையும் பொதுமக்களையும் சிறப்புறச் செய்வதே சுவாமிகளுடைய லட்சியமாக இருந்ததை அவர் நன்கு உணர்ந்து, அந்த லட்சியம் முன்னேற உழைத்தார். பெண்களுக்கு ஏற்ற கல்வியை அவர்களுக்கு அளிப்பதை சுவாமிகள் முக்கிய கடமையாகக் கருதினார். மாதர்களுக்குக் கல்வி வசதியை மட்டும் நல்ல முறையில் ஏற்படுத்தித் தந்துவிட்டால். மாதருடைய பிரச்சினைகளையெல்லாம் மாதர்களே தீர்த்துக்கொள்ளுவர் என்பது சுவாமிகளுடைய நம்பிக்கையாக இருந்தது. மாதர்களுக்குத் தலைவிகளாக இருந்து அவர்களை நல்வழியில் செலுத்தும் பொறுப்பை ஏற்கும் மாதர் மணிகள் தம் தொண்டைச் செய்வதிலேயே இல்வாழ்வைக் காணவேண்டும், தர்மத்துறை சம்பந்தப்பட்ட பொறுப்புகளிலேயே பந்தமுறவேண்டும்; குரு, தாய்நாடு, பொது

மக்கள் இவர்களிடமே அன்பும் பற்றும் கொள்ள வேண்டும் என்பது அவருடைய குறியாக இருந்தது. பெண் கல்வி அமைய வேண்டிய வகை பற்றி நிவேதிதாதேவி பல கருத்துக்களை சுவாமிகளிடமிருந்து கேட்டறிந்து அவற்றைத் தம் நூல்களில் குறித்து வைத்துப் போயிருக்கிறார்.

நிவேதிதா இந்தியப் பெண்களின் முன்னேற்றத்திற்காக உழைப்பதற்கேற்ற திறனும் உற்சாகமும் ஏராளமாகப் பெற்றிருந்தார் என்பதை சுவாமிகள் அறிந்து மகிழ்ந்திருந்தார். ஆனால் அந்தப் பணி வெற்றியுறப் பொருள் உதவி ஏராளமாகத் தேவைப்பட்டது. பணியாளர்கள் பலரும் தேவைப்பட்டனர்.

1897-ல் மேனாட்டிலிருந்து திக்விஜயராகத் திரும்பிய சுவாமிகள் 1899-ல் மீண்டும் மேனாடு செல்லத் திட்டமிட்டார். நிவேதிதாவும் அவருடன் மேனாடு சென்று கல்விப் பணிக்கான திரவிய சகாயம் திரட்டலாமா என்று யோசித்தார். அவர் ஊக்கத்துடன் துவக்கிய சிறு பள்ளியை இன்னமும் விரிவடையச் செய்வது அவசியமென்று அவருக்குப் புலப்பட்டது. பள்ளியில் படித்த பெண்கள், படிப்பு முடிந்ததுமே திருமணம் செய்துகொண்டு குடும்ப வாழ்வில் ஈடுபடுவதினால் அவர்களிடமிருந்து பொதுப் பணியை எதிர்பார்க்க இடமில்லாதிருந்தது அக்கால இந்தியச் சூழ்நிலை. ஆனால் திருமணமாகி விரைவில் கணவரை இழந்துவிட்ட பல விதவை மாதரைச் சமுதாய சேவைத் துறையில் ஈர்க்கலாம் என்ற எண்ணம் பொருத்தமெனப்பட்டது நிவேதிதாதேவிக்கு.

எல்லாவற்றிற்கும் பொருளுதவி முதலில் திரட்டப்படவேண்டியிருந்தது. இந்த உதவி இந்தியாவிலிருந்தே கிடைக்கும் என்று எதிர்பார்க்க அக்காலச் சூழ்நிலை இடமளிக்கவில்லை. 1898 ஜனவரி 28-ல் கல்கத்தா வந்து சேர்ந்திருந்த நிவேதிதா தேவியார், சில மாதங்கள் பாரதத்தில் தங்கியிருந்து பல்வேறு அனுபவங்களைப் பெற்று, பாரததேவியின்மீது பேரன்பு நிறையப் பெற்றவராய், அந்தத் தேவியின் திருப்பணியை இன்னமும் சிறக்கப் பண்ணுவதற்காகவே 1899 ஜூன் 20ஆம் நாளன்று கல்கத்தாவிலிருந்து கோல்கொண்டா என்ற கப்பலில் சுவாமி விவேகானந்தர், சுவாமி துரியானந்தர் ஆகியோருடன் வங்காள விரிகுடா வழியாக மேனாட்டுக்குக் கடற்பிரயாணம் சென்றார். தூய அன்னையின் ஆசியும் பேலூர் மடத்துத் துறவிகளின் நல்வாழ்த்தும் அவருக்கு மனநிறைவை அளித்திருந்தன.

கப்பல், துறையை விட்டு நகர்ந்தது. கப்பல் தட்டில் நின்றுகொண்டு நிவேதிதாதேவி தன் ஆன்மிகத் தாயகத்தை உணர்ச்சி ததும்பப் பார்த்தவாறு இருந்தார். ''போய்விட்டு'' வா என்று பாரததேவி நிவேதிதாவுக்கு ஆசிமொழி கூறினாள்.



ஆன்மா அமரன். அவனை யாராலும் கொல்லவோ அழிக்கவோ முடியாது.

—சாக்ரடீஸ்.

பூமியில் செல்வக் குவியல்களை உங்களுக்கென்று சேர்த்து வைக்காதீர்கள். இங்கே பூச்சியும் துருவும் அவைகளைப் பாழாக்கிவிடும். திருடர்கள் கன்னமிட்டுத் திருடுவார்கள்.

ஆனால், நீங்கள் அருள் உலகில் உங்களுக்கென்று செல்வக் குவியல்களைச் சேர்த்து வையுங்கள். அங்கே பூச்சியும் துருவும் கெடுப்பதில்லை. திருடர்கள் கன்னமிட்டுத் திருடுவதும் இல்லை. ஏனெனில், உங்கள் செல்வங்கள் எங்கிருக்குமோ அங்குதான் உங்களுடைய இதயமும் இருக்கும்.

—இயேசு கிறிஸ்து.

காற்றில் அடிபட்டுத் தள்ளாடும் கப்பலைப்போல் உள்ளமானது அலைபடும்போது நம் உள்ளத்தில் தூங்கும் இறைவனை எழுப்புவோமாக. எல்லாப் புயலையும் அடக்கும் வல்லமை அதற்கு உண்டு. நம்முடைய சித்தத்தில் உறங்கும் ஆண்டவனை எழுப்புவோமானால் மரக்கலம் கஷ்டமின்றிச் செல்லும்.

—கிறிஸ்தவத் துறவி சகோதரர் லாரன்ஸ்.

# ஸ்ரீராமக்ருஷ்ண கர்ணாம்ருதம்

## ஸ்ரீ பாலபட்டர் அருளியது

உரையாசிரியர் : அண்ணா என். சுப்ரமண்யம்

### 9. பக்தர்களும் யோகிகளும் ஞானிகளும் காணும் பரம்பொருள்

भक्तानां हृदये जाग्रद्योगिनां निटिले स्वपन ।
सुष्वपन् ज्ञानिनां मूर्ध्नि रामकृष्णो जयत्यसौ ।। ९ ।।

பக்தானாம் ஹ்ருதயே ஜாக்ரத்—
யோகினாம் நிடிலே ஸ்வபன் |
ஸுஷ்வபன் ஜ்ஞானினாம் மூர்த்னி
ராமக்ருஷ்ணோ ஜயத்யஸௌ || 9 ||

**பதவுரை** :—(பக்தானாம்) பக்தர்களின் (ஹ்ருதயே) இருதயத்தில் (ஜாக்ரத்) விழிப்பு நிலையில் இருந்துகொண்டும் (யோகினாம்) யோகிகளின் (நிடிலே) புருவமத்தியில் (ஸ்வபன்) சொப்பன நிலையில் இருந்துகொண்டும் (ஜ்ஞானினாம்) ஞானிகளின் (மூர்த்னி) சிரசில் (ஸுஷ்வபன்) ஸுஷுப்திஎனும் ஆழ்ந்த உறக்க நிலையில் இருந்துகொண்டும் (அஸௌ) இந்த (ராமக்ருஷ்ண:) ராமகிருஷ்ணர் (ஜயதி) வெற்றியுடன் விளங்குகிறார்.

9. பக்தர்களின் இதயத்தில் விழிப்புநிலையில் இருந்துகொண்டும், யோகிகளின் புருவ மத்தியில் சொப்ன நிலையில் இருந்துகொண்டும், ஞானிகளின் சிரசில் ஸுஷுப்தி என்னும் ஆழ்ந்த உறக்கநிலையில் இருந்துகொண்டும் இந்த ராமகிருஷ்ணர் வெற்றியுடன் விளங்குகிறார்.

**ஒப்பிடுக** :—'சிர: ஸ்திதா சந்த்ரநிவா, பாலஸ்தா இந்த்ர — தனு: ப்ரபா, ஹ்ருதய ஸ்தாரவிப்ரக்யா, சிரசில் பிரம்மரந்திரத்தில் நிலவுபோலும், நெற்றியில் வானவில் போலும், இருதயத்தில் சூரியன்போலும் பிரகாசிப்பவளாகப் பராசக்தி வர்ணிக்கப்படுகிறாள். (லலித ஸஹஸ்ரநாமம் 591—596). சூரிய வெளிச்சம்போல் ஜாக்ரம், பல வர்ணமுடைய வானவில் போல் ஸ்வப்னம், குளிர்ந்த நிலவுபோல் ஸுஷுப்தி. இவை பக்தர்கள், யோகிகள், ஞானிகள் ஆகியோரின் அனுபவங்களுக்கு ஒப்பிடப்படுகின்றன. மூன்றிலும் விளங்கும் பராசக்தியின் வடிவே ஸ்ரீராமகிருஷ்ணர் ஆவார்.

### 10. பாரத நாட்டின் சீரிய செல்வம்

एकत्र सम्मिलित विश्वशुभस्वरूपा
श्रीदीक्षणेश्वरपुरे विहिताधिवासा ।
अज्ञेषु कीर्ण परमात्म-सुखानुभूति-
र्जीयाच्चिरं भरतवर्ष-महाविभूतिः ।। १० ।।

ஏகத்ர ஸம்மிலித—விஶ்வஸுபஸ்வரூபா
ஸ்ரீதக்ஷிணேஶ்வரபுரே விஹிதாதிவாஸா |
அஜ்ஞேஷு கீர்ண —பரமாத்ம — ஸுகானுபூதிர்—
ஜீயாச்சிரம் பரதவர்ஷ — மஹாவிபூதி: || 10 ||

**பதவுரை**:—(ஏகத்ர) ஒரே இடத்தில் (ஸம்மிலித) குவிந்த (விஶ்வ - ஶுப - ஸ்வரூபா) உலக மங்கள வடிவினரும் (ஸ்ரீதக்ஷிணேஶ்வர — புரே) ஸ்ரீதக்ஷிணேசுவரபுரத்தில் (விஹித—அதிவாஸா) இருப்பிடம் கொண்டவரும் (அஜ்ஞேஷு) அஞ்ஞானிகளிடமும் (கீர்ண—பரமாத்ம—ஸுகானுபூதி:) பரமாத்ம சுகானுபவத்தை வாரி வழங்கியவரும் (பரதவர்ஷ—மஹா விபூதி) பாரத நாட்டின் சீரிய செல்வம் போன்றவரும் ஆகிய அவர் (ஜீயாத் சிரம்) பல்லாண்டு வாழ்க.

10. ஒரே இடத்தில் குவிந்த உலக மங்கள வடிவினரும், ஸ்ரீ தட்சிணேஸ்வரபுரத்தில் இருப்பிடம் கொண்டவரும், அஞ்ஞானிகளிடமும் பரமாத்ம சுகானுபவத்தை வாரி வழங்கியவரும், பாரத நாட்டின் சீரிய செல்வம் போன்றவரும் ஆகிய அவர் பல்லாண்டு வாழ்க.



# அரசனும் மகாமேதையும்

**பிரம்மசாரி நிரஞ்ஜனசைதன்யா**

சாதகவர்மன் என்ற திறமை வாய்ந்த ஓர் அரசர் இருந்தார். விவேகபுரியைத் தலை நகராகக் கொண்டு அவரது அரசாட்சி நடை பெற்றது. மக்கள் நலனையே தலையாயதாகக் கருதிச் சாதகவர்மன் அரசு செலுத்தினர். மக்கள் எவ்வித குறைவுமின்றி வளமாக வாழ்ந் தார்கள். ஆகவே மன்னனின் புகழ் எங்கும் பரவியது.

அரச குடும்பத்தில் பிறந்த சாதகவர்மன் பிறந்தது முதல் அரசனுக்குரிய ராஜபோகங் களுக்கிடையில் வாழ்ந்தான். அரசனுக முடி சூட்டப்பட்ட பிறகு, அரியணையில் அமர்ந்து பல சாதனைகள் நிகழ்த்திப் புகழ் பெற்ருன். பல ஆண்டுகள் சக்கரவர்த்தியாகப் புகழ் வாழ்க்கை வாழ்ந்த அரசனுக்கு, காலம் செல்லச்செல்ல உலக வாழ்க்கையில் வெறுப்பு தோன்றியது.

முறை வழுவாது அரசாண்டதால் அரசனின் மனம் நல்ல பரிபக்குவத்தைப் பெற்றது. கால மெல்லாம் உலக இன்பங்களையும் பெரும் சிறப்புக்களையும் வாழ்க்கையில் கண்ட மன்ன னுக்கு, அவைகளின்பேரில் இருந்து வந்த நாட் டம் போய்விட்டது. கடவுள் சிந்தனையில் ஆழ்ந்து தோய்ந்திருக்க அவன் உள்ளம் விழைந் தது. 'கடவுள் சாட்சாத்காரம் ஒன்றே ஒன்று தான் வாழ்க்கையின் ஒரே இலட்சியம்' — என் பதைப் பண்பட்ட அவனது உள்ளம் உணர்ந்து விட்டது. மன்னன், மத உண்மைகளைப் புகட் டும் சாஸ்திரங்களைப் படிக்கவும் சிந்திக்கவும் தொடங்கினன். அவைகள், இதுவரையிலும் பரபரப்பு நிறைந்த வாழ்க்கைச் சூழலில் இருந்துவந்த மன்னனுக்கு, முதல் முறையாக அமைதியின் சுவையை உணர வைத்தன.

ஒருமுறை அரசன் ஸ்ரீமத் பாகவதத்தைப் படித்துக் கொண்டிருந்தான். அதில் சுகதேவர், பரீட்சித்து மகாராஜாவுக்கு ஏழு நாட்கள் ஸ்ரீமத் பாகவதத்தை எடுத்துச் சொன்னதும், அதைக் கேட்டே பரீட்சித்து மகாராஜா ஆத்ம ஞானம் அடைந்தார் என்றும் குறிப்பிடப்பட் டிருந்தது. இந்தப் பகுதியைப் பாகவதத்தில் படித்ததும் அரசனின் உள்ளத்தில் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது.

''ஆஹா! ஆத்ம ஞானத்தை அடைவதற்கு இப்படிப்பட்ட ஒரு சுலபமான வழியிருப்பது எனக்கு இதுவரையிலும் தெரியாமல் போய் விட்டதே! நானும் இப்போது பரீட்சித்து மன்னனைப் போலவே பாகவதத்தைச் சொல்லக் கேட்கிறேன்'' என்று நினைத்தான் சாதகவர் மன்.

உடனே அரசன் தனது அமைச்சரை அழைத்து, ''எனக்கு ஸ்ரீமத் பாகவதத்தைச் சொல்லக்கூடிய நன்ருகப் படித்த ஒரு பண்டி தரை ஏற்பாடு செய்யுங்கள்'' என்று சொன் ஞன்.

அரசனின் ஆவலைக் கேட்டதுமே அமைச்ச ருக்கு, புகழ்பெற்ற பண்டிதர் ஒருவருடைய ஞாபகம் வந்தது. ''மன்னர் பெருமானே! நமது விவேகபுரியிலேயே மகாபண்டிதர் ஒருவர் இருக்கிருர். உலகப் புகழ் பெற்றுள்ள அவரைப் பற்றித் தெரியாதவர்களே கிடையாது. தேவ ரீருக்கும் அவரைப் பற்றித் தெரியும். பிரம்மஸ்ரீ புராண வல்லப, சகலகலாவல்ல இதிகாச ஆசார்ய, சித்தாந்த பூஷண, வேதாந்த கேசரி ஸ்ரீஸ்ரீ ராஜுசர்மா அவர்களைத்தான் நான் குறிப்பிடுகிறேன். அவருக்கு ஸ்ரீமத் பாகவத புராணமே தலைகீழ்ப் பாடமாகத் தெரியும். பாகவதத்தை அவ்வளவு நுட்பமாகப் படித் தவர்கள் யாருமே கிடையாது என்று சொல்ல லாம். அவருடைய பாகவதப் புராணத்தைக் கேட்டு மக்கள் அப்படியே மெய்மறந்து சொக்கிப் போய்விடுகிருர்கள். சக்கரவர்த்தி யின் ஆவலை நிறைவேற்றி வைப்பதற்கு எல்லா விதத்திலும் முற்றிலும் தகுதி வாய்ந்த மகா பண்டிதர் அவர். பாகவதப் பிரசங்கிகளி லேயே அவர்தான் தலைசிறந்தவர் என்பது மக்க ளுடைய ஏகோபித்த அபிப்பிராயம். அவ ருடைய பிரசங்கம் எங்கே நடைபெற்ருலும், எந்த நேரத்தில் நடைபெற்ருலும் மக்கள்ஆயிர மாயிரமாகக் கூடுகிருர்கள். எள்விழ இட மின்றி கூட்டம் கூடுகிறதென்ருல், அது அந்த

மகாவித்வானுடைய புராண பிரசங்கத்திற்குத் தான் என்று சொல்ல வேண்டும். அவரது பிரசங்கத்தைக்கேட்க வரும் மக்கள், காணிக்கையாகப் பரிசுப் பொருள்களை வாரி வாரித் தருகிறார்கள். அறிஞர்கள் அடங்கிய பல கழகங்களைச் சேர்ந்தவர்கள் அவருக்கு ஏராளமான பட்டங்களைச் சூட்டியும் பதக்கங்களைக் கொடுத்தும் கௌரவித்திருக்கிறார்கள். சக்கரவர்த்தியின் ஆவலை நிறைவேற்றி வைப்பதற்கு எல்லா விதத்திலும் முற்றிலும் தகுதி வாய்ந்த பண்டிதராக இருப்பவர் அவர்தான்'' என்று அரசனிடம் தெரிவித்தார் அமைச்சர்.

சக்கரவர்த்தி சாதகவர்மன், அமைச்சர் குறிப்பிட்ட மகாபண்டிதரிடமே ஸ்ரீமத் பாகவதத்தைக் கேட்க நிச்சயித்தான். ஆகவே அமைச்சரிடம், ''தாங்கள் சொல்வது முற்றிலும் உண்மைதான். அந்தப் பண்டிதரே எனக்குக் குருவாக இருந்து ஸ்ரீமத் பாகவதத்தைப் போதிக்கட்டும். அவரது புராண பிரசங்கத்திற்கு இதுவரையிலும் ஒவ்வொரு நாளும் கிடைத்துவந்த தொகையைக் காட்டிலும், அதிகமான தொகையை ஒவ்வொரு நாளும் நமது அரண்மனை பொக்கிஷத்திலிருந்து கொடுத்து வர ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கட்டளையிட்டான்.

அரசனின் ஆணைப்படியே அமைச்சர் எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்தார். மகா பண்டிதர் ராஜு சர்மாவுக்கு அழைப்பு அனுப்பப்பட்டது. அழைப்புக் கிடைத்தவுடன் பண்டிதருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கோ அளவில்லை. இப்படி ஒரு பெருமை வாழ்க்கையில் தனக்குக் கிடைக்கும் என்று அவர் கனவிலும் எதிர்பார்த்தது கிடையாது. 'நாடாளும் மன்னனுக்கே குருவாக அமர்ந்து போதிப்பதென்றால் சாதாரண விஷயமா?' என்று பலவாறு சொல்லி அவரிடம் நெருங்கிப் பழகியிருந்தவர்களெல்லாம் அவரை வாயாரப் பாராட்டினார்கள்.

அரண்மனையில் அரசனுக்கு ஸ்ரீமத் பாகவதத்தைப் போதிக்க ஆரம்பித்தார் பண்டிதர். அவர் தமது முழுத்திறமையையும் செலுத்தி பாகவதத்தை பல கோணங்களிலும் அரசனுக்கு எடுத்துச் சொன்னார். சாஸ்திரங்களிலிருந்து ஏராளமான மேற்கோள்களை எடுத்துக்காட்டி விளக்கினார்.

இவ்விதம் இரண்டு மாதகாலம் பாகவத வகுப்புக்கள் முறையாக நடந்தன. பாகவதத்தைச் சிரவணம் செய்வதால் தனக்கு ஆத்ம ஞானம் ஏற்பட்டுவிடும் என்று நினைத்திருந்த அரசன், அப்படி ஆத்மஞானம் ஏதும் தனக்கு ஏற்படவில்லை என்பதை உணர்ந்தான். ஆகவே ஒருநாள் அவன் பண்டிதரிடம் வெளிப்படையாகவே, ''சுவாமி! பாகவதத்தை பரீட்சித்து மன்னன் ஏழே நாட்கள்தான் சிரவணம் செய்தார். அந்த ஏழு நாட்களிலேயே பரீட்சித்துவுக்கு ஆத்ம ஞானம் ஏற்பட்டுவிட்டது. நானோ உங்களிடம் இரண்டு மாதமாக பாகவதம் கேட்டு வருகிறேன். அப்படியிருக்கும்போது எனக்கு இன்னமும் ஆத்ம ஞானம் ஏற்படவில்லையே! இதற்கு என்ன காரணம்? காரணத்தை நீங்கள் எனக்கு நாளைக் காலையிலேயே சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் தினந்தோறும் தங்களுக்கு நான் கொடுத்துவரும் ராஜசன்மானங்கள் நிறுத்தப்படும்'' என்று சொல்லிவிட்டான்.

அரசனுக்கு என்ன பதில் சொல்வதென்றே பண்டிதருக்குப் புரியவில்லை. காரணம் அவருக்கும் தெரியவில்லை. ஆகவே மிகுந்த மன வருத்தத்துடன் பண்டிதர் தமது வீட்டிற்குத் திரும்பினார்.

பண்டிதருக்கு ஒரு சிறிய பெண் இருந்தாள். மகா மேதை என்பது அந்தப் பெண்ணின் பெயர். பெயருக்கு ஏற்ப புத்திசாலியான அவள், தந்தை அரண்மனையிலிருந்து திரும்பியதும் வழக்கத்திற்கு மாறாக வாடிய முகத்துடன் இருப்பதைக் கவனித்தாள். சோர்ந்து போயிருந்த பண்டிதரிடம், ''அப்பா, நீங்கள் ஏன் இப்படி ஒரேயடியாகக் கவலைப் பட்டுக்கொண்டிருக்கிறீர்கள்? அரண்மனையில் துன்பத்தைத் தரக்கூடிய சம்பவம் ஏதாவது நடந்ததா?'' என்று விசாரித்தாள்.

''மகளே, பெரியவர்களுடைய கவலைகள் உனக்கு எதற்கு? என் கவலை என்னோடு போகட்டும். உனக்குத் தெரிந்து அதனால் என்ன லாபம் வரப்போகிறது? நீ உனது காரியங்களைப் பாரம்மா'' என்று மகளிடம் சொன்னார் பண்டிதர்.

ஆனால் தந்தை சொல்லியதைக் கேட்டு, அதோடு மகாமேதை விட்டுவிடுபவளாக இல்லை. ''உங்கள் கவலை என்ன என்று சொல்லித்தான்

பாருங்களேன். குழந்தைகள் என்ருலும் அவர்களுக்கும் கொஞ்சம் புத்தி இருக்கத்தானே செய்கிறது? சிறு துரும்பும் பல்குத்த உதவும்; இரும்பினுல் செய்யப்பட்ட ஈட்டி நுழையாத பாறைக்குள்ளும் பசுமரத்தின் வேர் நுழைந்து விடுகிறது. உறுதி வாய்ந்த பெரிய ஈட்டியால் செய்ய முடியாத காரியத்தை, சின்னஞ்சிறிய முள் செய்துவிடும் என்பதை மறுக்க முடியாதல்லவா?'' என்று கேட்டாள்.

பண்டிதருக்கும் மகளின் புத்திசாலித்தனம் தெரிந்துதான் இருந்தது. ஆனுல் இப்போது அவளால் தனக்கு எப்படி உதவி செய்ய முடியும் என்ற நினைவுடனேயே, மகள் விடாப் பிடியாயிருந்ததால் விஷயத்தை அவளிடம் தெரிவித்தார் பண்டிதர்.

தந்தை சொன்னதைக் கவனமாகக் கேட்ட மகாமேதை, ''அப்பா! நாளைக்கு அரண்மனைக்குப் போகும்போது என்னையும் உங்களுடன் அழைத்துப் போங்கள். மன்னனின் கேள்விக்கான சரியான பதிலை நானே அவரிடம் சொல்கிறேன்'' என்று சொன்னுள்.

பண்டிதருக்கு மகளின் பேச்சு விளையாட்டுத் தனமாகப்பட்டது. ஆனுல் அவளுடைய பேச்சை அவரால் தட்டிக் கழிக்கவும் முடியவில்லை.

மறுநாள் ராஜுசர்மா மகளை அழைத்துக் கொண்டு அரச சபைக்குச் சென்ருர். பண்டிதர் என்ன சொல்லப்போகிருர் என்பதைத்தெரிந்து கொள்வதற்காக விவேகபுரியின் மன்னன் ஆவலோடு காத்திருந்தான்.

பண்டிதர் அரசருக்கு வணக்கம் தெரிவித்து விட்டு, ''அரசரே, தங்களுடைய கேள்விக்கு என்னுடைய மகள் பதில் சொல்லுவாள்'' என்று சொன்னுர்.

பண்டிதர் தன்னுடைய மகளை அழைத்து வருவார் என்ருே, அவள் தனது கேள்விக்குப் பதில் சொல்லுவாள் என்ருே சாதகவர்மன் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. ஆகவே அவன் வியப்புடன், ''குழந்தாய்! நீ என்ன பதிலைச் சொல்லப்போகிருய்?'' என்று கேட்டான்.

"பேரரசரே, தங்களுடைய கேள்விக்கு நான் பதில் சொல்கிறேன். ஆனுல் அதற்கு முன்பு, நான் சொல்வதைப்போல சிறிது நேரம் தாங்கள் நடந்துகொள்ள வேண்டும் என்று மிகுந்த பணிவுடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்'' என்ருள் மகாமேதை.

அரசர் சம்மதித்தார்.

''மன்னர் பெருமானே! இதோ இங்கே இரண்டு தூண்கள் இருக்கின்றன. ஒரு தூணில் என்னை நன்ருக இறுக்கிக் கட்டுவிடும்படி உங்கள் சேவகர்களுக்கு கட்டளையிடுங்கள். அப்படியே மற்ருெரு தூணில் தங்களைக் கட்டிப் பிணைக்கும்படி சொல்லுங்கள்'' என்ருள் மகாமேதை.

மகாமேதை சொன்னபடியே அரசனையும் சிறுமியையும் கயிற்றைக் கொண்டு சேவகர்கள் தூண்களில் கட்டினுர்கள். பிறகு சிறுமி அறையில் இருந்தவர்கள் அனைவரையும் அங்கிருந்து வெளியேறிவிடும்படி கூறினுள்.

அறையில் இருந்தவர்கள் எல்லோரும் வெளியேறி விட்டார்கள். அரசனும் மகாமேதையும் தூண்களில் கட்டப்பட்ட நிலையில் தனியாக இருந்தார்கள்.

''மன்னரே! நான் இப்படி மாட்டிக்கொண்டு தூணில் கட்டப்பட்டு இருக்கிறேனே! தயவு செய்து எனது கட்டுகளை அவிழ்த்துவிடுங்கள்'' என்று கெஞ்சும் குரலில் மகாமேதை அரசனிடம் வேண்டிப் பிரார்த்தித்தாள்.

சிறுமி மன்ருடிக் கேட்டதும் அரசர், ''பெண்ணே, உனக்கு என்ன மூளை கலங்கிப் போய்விட்டதா? முட்டாள்தனமாக அல்லவா உன்னுடைய பேச்சு இருக்கிறது? நானே இங்கு பந்தப்பட்டு தூணில் கட்டப்பட்ட நிலையில் இருந்து கொண்டிருக்கிறேன். நீயே இதைப் பார்த்துக் கொண்டும் இருக்கிருய். பந்தப்பட்டுள்ள நான் பந்தப்பட்டுள்ள உன்னை எப்படி விடுவிக்க முடியும்?'' என்று கேட்டார்.

இதைக் கேட்ட உடனே மகாமேதை கலகலவென்று சிரித்தாள். ''மகராஜா! உங்களுடைய கேள்விக்கான சரியான பதிலை நீங்களே சொல்லிவிட்டீர்கள்! பரீட்சித்துக்கு ஸ்ரீமத் பாகவதத்தை உபதேசம் செய்த சுகதேவர் ஆத்மஞானம் அடைந்த மகாஞானி, பரமஹம்சர். அவரிடம் பாகவதம் கேட்ட பரீட்சித்து மன்னன் ஏழு நாட்களிலேயே ஆத்மஞானத்தை அடைந்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. என்னுடைய தந்தையோ அஞ்ஞானத்தில் இருப்பவர். உலகப் பற்று நிறைந்தவர். மாயையிலிருந்து விடுபடாமல் பந்தத்தில் இருப்

பவர். நீங்கள் தரும் செல்வங்களைப் பெறும் நோக்கத்துடன் அவர் உங்களுக்குப் பாகவதம் சொல்லி வந்தார். பணத்திற்கு ஆசைப்பட்டு பாகவதம் சொன்ன அவருடைய உபதேசத்தைக் கேட்டு உங்களுக்கு எப்படி ஆத்மஞானம் வரும்?

''வெறும் சாஸ்திர அறிவினுல் மட்டும் என்ன பயன் ஏற்படும்? பண்டிதர்களுக்கு சாஸ்திரங்களிலும் சுலோகங்களிலும் மட்டும் நல்ல பழக்கம் இருக்கலாம். ஆனுல் அவைகளை கிளிப்பிள்ளையைப்போல திரும்பத்திரும்ப எடுத்துச் சொல்வதால் மட்டுமே என்ன நன்மை ஏற்படும்? உண்மையிலேயே ஆன்மிக வாழ்க்கையில் முன்னேற்றத்தைப் பெறவேண்டுமானுல், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள உண்மைகளை நடைமுறை வாழ்க்கையில் அனுபவத்திற்குக் கொண்டுவர வேண்டும். ஒருவனுடைய உள்ளத்தில் காமம், பணம் போன்ற உலகப் பற்றுக்கள் இருக்கும்வரையிலும், கேவலம் சாஸ்திரப்படிப்பு மட்டும் ஆத்ம ஞானத்தைத் தராது. அப்படிப்பட்டவன் முக்தியைப் பெறவும் வழியில்லை.

''மீண்டும் சொல்கிறேன். எரியும் தீபத்தைக் கொண்டுதான் மற்ருெரு தீபத்தை ஏற்ற முடியும். அதைப்போல பந்தத்திலிருந்து விடுபட்ட ஆத்மஞானி ஒருவரால்தான், பந்தத்திலிருந்து பிறரை விடுவித்து ஆத்ம ஞானத்தை பெறும்படி செய்யமுடியும்'' என்று சிறுமி வணக்கமாகப் பேசி முடித்தாள்.

சிறுமி சொன்ன உண்மை அரசனுக்கு விளங்கியது. அரண்மனை சேவகர்கள் அறையில் நுழைந்து, மன்னனையும் மகாமேதையையும் பிணைத்திருந்த கட்டுக்களை அவிழ்த்து விடுவித்தனர்.

அன்றிரவு அரசன் அரண்மனையைவிட்டு வெளியேறினுன். இமயமலைச் சாரலில் உள்ள ஆத்மஞானி ஒருவரை அடைந்து மெய்ஞானம் பெறுவதற்காகப் பயணப்பட்டான்.



தேவை குறையும் அளவுக்கே தெய்வத்தன்மை அடைவோம்.

—ஸாக்ரடீஸ்.

மனதாலும், வாக்காலும் கண்ணனையே சிந்திப்பவன் உண்மை வைஷ்ணவன் ஆவான்.

—ஸ்ரீகிருஷ்ண சைதன்யர்.

பரமன் கண்ணுக்குக் கண்ணுகவும், மனதுக்கு மனதாகவும், வாக்குக்கு வாக்காகவும் பிராணனுக்குப் பிராணனுகவும் இருக்கிருர்.

—கேனோபநிஷதம்.

நின்ருலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் மென்ருலும் துயின்ருலும் விழித்தாலும் இமைத்தாலும் மன்ருடு மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை குன்ருடு உணர்வுடையார் தொண்டராம் குணமிக்கார்.

—பெரிய புராணம்.

சிறு தூசியைக் காற்று சுலபமாக மலைமேல் தூக்கி வைத்து விடுகிறது. கல்லையோ, தூக்குவதில்லை. அதுபோல் சத்சங்கங்கள் பணிவு உள்ளவனை உயர்த்திவிடும். ஆனுல் கர்வம் கொண்டவனையோ தொடுவதோடு நின்றுவிடும்.

—தாமஸ் பேன்.

அப்பரம புருஷன் எண்ணிறந்த தலைகளை உடையவர். எண்ணிறந்த கண்களை உடையவர். எண்ணிறந்த பாதங்களை உடையவர். உலகம் முழுவதையும் தன்னகத்து அடக்கி அதற்கு அப்பாலும் அவர் இருக்கிருர்.

—புருஷசூக்தம்.



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

(16—4—77 முதல் 15—5—77 வரை)

ஸ்ரீ சங்கர ஜயந்தி: 24-4-77 ஞாயிறு: **பொதுக்கூட்டம்:** *(மாலை 5 மணி முதல் 6–30 வரை)*
தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்.
பேசுவோர் : டாக்டர் டி. என். கணபதி (ஆங்கிலம்)
திரு 'அண்ணு' சுப்ரமண்யம் (தமிழ்)

ஸ்ரீ ராமாநுஜ ஜயந்தி 1-5-77 ஞாயிறு: **பொதுக்கூட்டம்:** *(மாலை 5 மணி முதல் 6–30 வரை)*
தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்.
சொற்பொழிவாளர்: திரு R. ரங்காச்சாரி (ஆங்கிலம்)
டாக்டர் K. ரங்கசாமி அய்யங்கார் (தமிழ்)

ஸ்ரீபுத்த ஜயந்தி: 8–5–77 ஞாயிறு: **பொதுக்கூட்டம்:** *(மாலை 5 மணிக்கு)*

**சத்சங்கம்:** ஞாயிறு தோறும் மாலை 4 மணி முதல் 8 மணி வரை.

மாலை 4 முதல் 4–20 வரை: ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (17–4–77)
ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (15–5–77)

மாலை 4–20 முதல் 4–30 வரை: தியானம்

மாலை 4–30 முதல் 5–30 வரை: சொற்பொழிவு (தமிழ்)
**ஸ்ரீமத் ராமாயணம்:** டாக்டர் என். விழிநாதன் (17-4-77)
**ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்:**
டாக்டர் டி. எம். பி. மகாதேவன் (15–5–77)

மாலை 5–30 முதல் 6–30 வரை: சொற்பொழிவு (ஆங்கிலம்) (17–4–77 & 15–5–77)
**ஸ்ரீமத் பகவத்கீதை** – சுவாமி தபஸ்யானந்தர்.

**சிறப்புச் சொற்பொழிவுகள்:**
சனிக்கிழமை மாலை 5–45 மணிக்கு

1. **கந்தரனுபூதி:** திரு வி. எஸ். மணி (30–4–77)
2. **இராமாயணத்தில் ஆராய்ச்சி** திரு பி. ராமகிருஷ்ணன் (7–5–77)
3. **கஜேந்திர மோட்சம்** – திரு க. கோதண்டராமன் (14–5–77)

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்:** *(மாலை 5.45)*

திங்கள்: (ஆங்கிலம்) **ஸ்ரீ ராமகிருஷ்ண கதாம்ருதம்** —சுவாமி அம்ருதானந்தர்

செவ்வாய்: (ஆங்கிலம்) **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்** —சுவாமி கபீரானந்தர்

புதன்: (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பாகவதம்**—சுவாமி கோலோகானந்தர்

வியாழன்: (தமிழ்) **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்** —பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

வெள்ளி: (தமிழ்) **மகாபாரதம்** – திரு 'அண்ணு' சுப்ரமண்யம்

வெள்ளி: (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பகவத்கீதை** மாலை 6–30 சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம் 18, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி.)

**விசேஷ தினங்கள்:**
அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (24–4–77)
அக்ஷய த்ரிதீயை – வியாழன் (21–4–77)
ஸ்ரீசங்கர ராமாநுஜ ஜயந்தி – சனிக்கிழமை (23–4–77)
சந்திர கிரகணம்—திங்கள் 18-4-77 (மாலை 4.56 முதல் 6.23 வரை)
ஸ்ரீபுத்த ஜயந்தி —செவ்வாய் (3–5–77)
ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் : **ஏகாதசி** தினங்களில் ஆரதிக்குப் பிறகு 30–4–77 & 13–5–77)

*அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.*

தலைவர்,
**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600 004**

தொலைபேசி எண் : **71231**

விலைப் பட்டியல்

## எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

| ஸ்ரீ ராமகிருஷ்ணர் : | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ,, ,, காலிகோ | 12 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம் (முதல் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டாம் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டு பாகமும்) | 15 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 4 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 8 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபநிஷதம் | 1 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதைகள் | 2 | 75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | 2 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கதை | 0 | 35 |

| சுவாமி விவேகானந்தர்: | | |
|---|---|---|
| இந்தியப் பிரசங்கங்கள் | 4 | 50 |
| ,, ,, காலிகோ | 6 | 00 |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 3 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 1 | 25 |
| சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி) | 11 | 00 |
| சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள் | 6 | 00 |
| ,, ,, காலிகோ | 7 | 00 |
| இராஜயோக உரைகள் | 2 | 50 |
| அருளுரை | 1 | 75 |
| கல்வி | 2 | 50 |
| நமது தாய்நாடு | 1 | 00 |
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| கருமயோகம் | 2 | 00 |
| பக்தியோகம் (அச்சில்) | | |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| நம்மவர் நாட்டு ஞான வாழ்க்கை | 0 | 25 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 50 |
| எனது குருநாதர் | 1 | 25 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 60 |
| எனது போர்முறை | 0 | 75 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |
| விவேகானந்தர் பாதையிலே... | 0 | 50 |
| விவேகானந்தரின் கதை (அச்சில்) | | |

| ஸ்ரீ சாரதாதேவியார்: | | |
|---|---|---|
| ஸ்ரீ சாரதாதேவியார்—அவரது வரலாறும் திருவாக்கும் | 3 | 25 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 | 50 |
| தூய அன்னையார் ஸ்ரீ சாரதாமணி தேவியார் | 1 | 25 |

| இதர நூல்கள்: | | |
|---|---|---|
| பக்தி ஸாரம் | 2 | 25 |
| பக்தி மார்க்கம் | 1 | 00 |
| கடோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| இந்துமத ஸாரம் | 3 | 00 |
| குருதேவர் வாக்கியம் | 1 | 25 |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 | 00 |
| நாரதர் கலகம் | 2 | 00 |
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| வேதாந்த ஸாரம் | 1 | 25 |
| காலிகோ | 2 | 00 |
| பஜனாவளி | 5 | 00 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| நடராஜ வடிவம் | 0 | 35 |
| ஸ்ரீ ராமநாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 20 |

| முரசு நூல்கள் :(பாக்கட் சைஸ்) | | |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 0 | 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| புத்தரின் அற முரசு | 0 | 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள் முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 0 | 80 |

**சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம் : சுடர்கள் 1—10**

சுவாமி விவேகானந்தர் பேசியவை, எழுதியவை—அனைத்தும் அடங்கிய 10 பகுதிகள்.
ஒவ்வொரு பகுதியும் 500 பக்கங்களுக்குக் குறையாதது.

சாதா பைண்டு விலை ரூ. 5–00 காலிகோ பைண்டு ரூ. 6–50



**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர் :: சென்னை 600004

ஆசிரியர்: சுவாமி சித்கனானந்தர்; கூட்டு ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்கனானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சென்னை 600004
அச்சிடுபவர்: S. இராமசுவாமி ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ் 97 லாய்ட்ஸ் ரோடு சென்னை 600086